





கம்பர் அருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி

## மூலமும் உரையும்.





ரிப்பன் பிரஸ், சென்னை.] [விலை அணா 5

ஸ்ரீ

ஸ்ரீவரவரமுநயே நம:

கவிச்சக்கரவர்த்திக் கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.

இது

சென்னைப் பச்சையப்பன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்

கா. ர. கோவிந்தராஜ முதலியாரவர்கள்

இயற்றிய

உரையுடனும்,

கம்பநாட்டாழ்வார் சரித்திரத்துடனும்,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1913

விலை அணா 5.

ஸ்ரீ

ஸ்ரீவரவரமுநயேநம:

கவிச்சக்கரவர்த்திக்

# கம்பநாட்டாழ்வார்

## திவ்விய சரித்திரம்.



ஆய்ந்துணரின் இவ்வுலகில் இன்பமெனப்படுவது நல்லிசைப் புலவர்களால் ஆக்கப்பட்டு நவில்தொறும் நயம்பல பயப்பனவாகிய நன்னூற்களைப் பயிலுதலால் உண்டாகும் இன்பமேயாம். ஆயினும் இது பஞ்சின் மெல்லடிப் பாவையரின்பம் பற்றாப்பருவத் திளங்குமரரால் அடையக்கூடாததுபோலக் கலையறிவில்லாத சிற்றறிஞரா லடையக் கூடாததாகும். இவ்வின்பத்தை யடையப்பெற்ற புண்ணியசாலிகள் இவ்வுலக விலாசங்களையெல்லாந் தம்மன வுலகத்திற் காண்பர். இவர் தங்கட் புலன் கதுவாப் பொருள் உலகிலிரா. இவர் தந் நோக்கமும் அரங்கொண்டராவிச் செப்பஞ் செய்யப்பட்ட போர்வேலென மிகவுங் கூர்மையுற்று மிளிராநிற்கும் எனின், கற்பார் பலர்க்கும் இத்தகைய நலங்களை யளிக்கவல்ல நூற்களை யியற்றுங் கவிவாணர்தம் பெருமையை யாவரே அளவிட்டுரைக்க வல்லார்? அவர்களது புகழே நிலைத்த புகழ். அவர்களே அழிவின்றி விளங்கும் இமையாநாட்டத் திமையோர். அவர்களுடைய திவ்விய சரித்திரங்களையே ஒவ்வொருவரும் படித்துத் தத்தம் இளங்குமரர்களுக்குச் சொல்லி வருவார்

ளாயின் அது மிகவும் நலஞ்செய்வதாகும். ஆதலின், அதற்கு அநுகூலமாகச் சங்கங்களுக்குள்ளே பாஞ்சசந்நியம்போலவும், மணிகளுக்குள்ளே கௌஸ்துபமணிபோலவும், தருக்களுக்குள்ளே கற்பகத்தருப்போலவும் கவிவாணர்களுக்குள்ளே மிகவுஞ் சிறந்துவிளங்கிய கவிச்சக்கரவர்த்திக் கம்பநாட்டாழ்வாரது திவ்விய சரித்திரத்தை ஈண்டு எழுதத் துணிந்தேன். மெய்ம்மைப் பெரும் புலவர்களே எழுதுதற்குரிய இவ்வொண்மைப் பெருஞ்சீர்க் கவிச்சக்கரவர்த்தியார்தந் திவ்விய சரித்திரத்தை யான் எழுதத்துணிந்ததைப்பற்றி உலகம் பொறுப்பதாக.

## முதல் அத்தியாயம்.

"சோழவளநாடு சோறுடைத்து" என்றபடி நீர்நிலவளங்களாற் சிறந்த சோழநாட்டில் கம்பநாடு என்னும் ஒரு சிறு நாட்டை யாண்டுவந்த சிற்றரசன் ஒருசமயம் நேர்ந்தபோரில் இறந்துபோனான். கருவுற்றிருந்த அவன் மனைவி மாற்றருக்கஞ்சி அந்நாட்டைவிட்டுச் சென்று திருவழுந்தூரை அடைந்து அவ்வூரிலிருந்த ஓச்சனொருவனால் ஆதரிக்கப் பெற்று அங்குத் தங்கி யிருந்தனள். சிலநாள் சென்று அவ்வுத்தமி முன்னைய நற்றவத்தின் பயனாக இளஞ் சூரியனேபோன்ற ஒரு மகவைக் கருவுயிர்த்தனள். அம்மைந்தன் கம்பநாட்டுத் தலைவன் என்பதுதோன்ற அவனுக்குக் கம்பநாடன் என்று பெயரிட்டனர். அம்மைந்தன் எழேட்டு ஆண்டு வயதுடையவனுப்த் தன்னைப்போன்ற இளஞ் சிறுவர்களுடன் விளையாடுங் காலத்தில் அச்சிறுவர்கள் கம்பநாடன் என்பதைச் சுருக்கிக் கம்பன் என வழங்குவா ராயினர். ஆகையால், அச்சிறிளங் குமாரனுக்கு அப்பெயரே மிகுதியாக வழங்குவதாயிற்று. அக்காலத்தில் திருவெண்ணெய்நல்லூரில் வரையாதளிக்கும் வள்ளன்மைபூண்டு பாவலர் தங்கள் நாவுறு புகழுடன் விளங்கிய

சடையப்ப முதலியார் அச்சிறுவனது வரலாற்றினைக் கேள்வியுற்று அவனையும் அவன் அன்னையையுந் தம்பால் வருவித்து அவனைத் தமது புதல்வர்களுடன் பாடசாலைக்கு அனுப்பினர். அவ்வொண்புலச் சிறுவனும் யாவரும் வியக்கும்படி மாணவர் எவரினு முதன்மைபெற்று விளங்கினன். அப்பாடசாலையின் உபாத்தியாயர் எல்லா மாணவர்களையும் அனுப்பு முறைப்படி நம் கம்பநாட்டுச் சிறுவனையும் ஒருநாள் தமது கம்பங் கொல்லையைக் காக்கும்படி அனுப்பினர். அவன் நடுப்பகலில் நித்திரைவர அங்கிருந்த காளி கோயிலிற் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தனன். அங்ஙனந் தூங்காநின்றவன் ஒரு குதிரை கொல்லையை அழிப்பதாகக் கனவுகண்டு திடுக்கிட் டெழுந்து அவ்வாறே அவ்வூர் அதிகாரியாகிய காளிங்கராயனது குதிரைவந்து கொல்லையை அழித்தலைக் கண்டு அதனை போட்டினன். அது எவ்வளவு ஓட்டியும் ஓடாமல் மேயக் கண்டு தனது உபாத்தியாயருக்கஞ்சிக் கோ என்றழுதனன். அங்ஙனம் அழுகின்ற அவ்வுபர்மதிச் சிறுவன் முன்பாகக் காளிதேவி தோன்றி "நல்விளஞ்சிறுவ! அழாதை; நின்நாவை நீட்டு" என்றாள். அம்மைந்தனும் அவ்வாறே தன் நாவை நீட்ட அத்தேவி அவன் நாவில் கலைமகளாரது பீஜாக்ஷரத்தை எழுதிவிட்டு மறைந்துபோயினள். உடனே அம் மேதகு மைந்தன்

"வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் காலைவைத்துச்—சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க ராயன்
குதிரைமா ளக்கொண்டு போ."

என்றொரு நேரிசைவெண்பாவைப் பாடினன். அதனையுணர்ந்து அங்குவந்து பார்த்துக் "காளிங்கராயன் இதனைக் கேட்டால் என்செய்வானோ" என்று அஞ்சி நடுங்கிய தமது ஆசிரியர் முதலி

மும் வண்ணம் 'குதிரைமீளக் கொண்டுவா' என ஈற்றடியை மாற்றிப் பாடினர்.

உடனே அப்பரி யுயிர்த்தெழுந்தது. அதனைக் கேள்வியுற்ற காளிங்கராயன் அவ்வருண்மதியாளனை வருவித்துப் பலவகை யுபசாரங்களைப் புரிந்து மிகவுஞ் சிறப்புசெய் தனுப்பினன். அவ்விளைஞர்பிரானும் தனக்கு அத்தகைய மேன்மையுண்டாதற்குக் காரணமாகிய சரஸ்வதி தேவியை முப்பது பாட்டுகளைக் கொண்ட ஓரந்தாதியினாற் பாடித் துதித்தனன். துதிக்க அத்தேவி அவன்முன் தோன்றி, அவன் விரும்பியபடி அவன் வேண்டுங்காலத்து வந்துதவுவதாக வரமளித்துச் சென்றனள். நங் கதாநாயகனாகிய அச்சீரியனை முன் "பையா!" என் றழைத்தவர்கள் பின்பு "ஐயா!" என் றழைக்கத்தொடங்கினர். ஆகலின் நாமும் அப்புகழ்வள நம்பியை அவன் என்று கூறாமல் அவர் என்றே கூறுவோமாக.

---

## இரண்டாம் அத்தியாயம்.

இங்ஙனம் சரஸ்வதிதேவியின் அருளால் கவிபாடுந் திறமை வளரப்பெற்ற கம்பநாடரது புகழ் சூரியன்றன் கிரணம் போல எங்கும் பரவிப் பொலிவதாயிற்று. அவரது அபிமானத்தைப் பெறவிரும்பிய ஸ்ரீராமன் என்னும் ஒரு வண்ணான் ஒருநாள் அவருடைய ஆடைகளை யாவரும் வியக்கும்படி வெளுத்துக் கொடுத்தனன். அது கண்டு கம்பநாடர்,

"சிரம்பார்த்தா னீசனயன் றேவிதனைப் பார்த்தான்
கரம்பார்த்தான் செங்கமலக் கண்ண—னுரஞ்சேர்
மலைவெளுத்த திண்புயத்து வண்ணான்சீ ராமன்
கலைவெளுத்த நேர்த்திதனைக் கண்டு."

என்றொரு கவியைப்பாடினர். பிறகு சிதம்பரத்திலிருந்து திருவெண்ணெய்நல்லூருக்கு வந்த தம்பிபுகான் என்னும் அம்பட்டன் வண்ணானைப்போல அவரது அபிமானத்தைப் பெற விரும்பி அவர் மனங்களிக்கும்படி அவருக்கு க்ஷவரஞ் செய்தனன். அதைக்கண்டு அவர்,

"ஆரார் தலைவணங்கா ராரார்தாங் கையெடார்
ஆரார்தாஞ் சத்திரத்தி லாதார்—சீராருந்
தென்புலியூர் மேவுஞ் சிவனருள்சே ரம்பட்டத்
தம்பிபுகான் வாசலிலே தான்."

என்றொரு கவிபாடினர். ஒருநாள் தாமும் தமது மனைவியுமாகப் பள்ளியறையி லிருக்கும்போது காற்று கதவை மோத, யாரோ கதவைத் தட்டுகின்றார்களென்று நினைத்துக் கதவைத் திறந்து பார்த்து யாரு மில்லாதிருக்கையால் கதவை மோதினது காற்றென்று தெளிந்து காற்றை முன்னிலைபாக்கி,

"கோற்கையான் மாறன் குலசே கரப்பெருமான்
பொற்கையா னகதை போதாதோ—நற்கமல
மன்றலே வாரி மணிவா சலையசைக்கத்
தென்றலே யேன்வந்தாய் செப்பு."

என்றொரு கவிபாடினர். ஒருமுறைச் சிங்கன் என்னுங் கருமான் மிகவு நேர்த்தியாக ஓரெழுத்தாணி செய்துகொடுக்க அதனைக் கண்டு,

"ஆழியா னாழி யயனெழுத் தாணியென்பார்
கோழியான் குன்றெறிய வேலென்பான்—பூழியான்
அங்கைமழு வென்பா னருள்பெரிய மாவண்டூர்ச்
சிங்க னுலைக்களத்திற் சென்று."

என்றொரு கவிபாடினர். ஒருகால் தம் விஷயத்தில் மிகவும் அன்பினைக்காட்டி யுபசரித்தவனாகிய அச்சுதன் என்னும் பிரபுவை,

"தினைவிளைத்தார் முற்றந் தினையுணங்குஞ் செந்நெல்
தனைவிளைத்தார் முற்றமது தானுங்—கனையு
முரசுணங்கச் சங்குணங்கு மூரித்தேர்த் தானை
அரசுணங்கு மச்சுதன் முற்றம்."

"அரச னகளங்க னச்சுதன் முற்றத்
தரச ரவதரித்த வந்நாண்—முரசதிரக்
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர் காற்றளையை
வெட்டிவிடு மோசை மிகும்."

"குடகர் குணகட லென்பர் குடகுக்
கிடகர் வடகட லென்பர்—வடகடலோர்
தென்கட லென்பர் திருந்துதா ரச்சுதநின்
முன்கடைநின் றார்க்கு முரசு."

"துறையுளா ரெங்கிரார் கூர்வே லிராம
விறையாறு திங்க ளிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந் தார்மார்பா வச்சுதா வந்நாளில்
வாலிக் கிளையான் கடை."

"தளையவிழ் நாண்மாலைத் தாயரே யாவி
களையினுமென் கண்டிறந்து காட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன் மாவிசயன் மால்யானை தன்னொடுவந்
தென்கண் புகுந்தா னினி."

எனப் புகழ்ந்துபாடினர். ஒருகால் நம் கவிச்சிரேஷ்டர் தொண்டைநாட்டுக்குச் செல்ல அந்நாட்டை அக்காலத்து ஆண்டிருந்த அரசன் அவரை வரவேற்றுப் பல வுபகாரங்களைச்செய் துபசரிக்க மகிழ்ந்து,

"வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்குஞ்
சுற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே—கற்றோர்
திறந்தாங்குந் தாங்குஞ் செகமுழுதுந் தாங்கும்
அறந்தாங்குந் தொண்டை யரசு."

என்று பாடிப்புகழ்ந்தனர். ஒருநாள் தோட்டக்காரனாகிய மாத்தத்தன் என்பவன் நம் கவிஞர் பெருமானுக்கு அவர் மகிழும்படி நல்ல கத்தரிக்காயும் முளைக்கீரையுங் கொடுக்க அவற்றைக்கண்டு களித்து,

"இருந்தவளைப் போனவளை யென்னை யவளைப்
பொருந்த வளைபறித்துப் போனான் – பெருந்தவளை
பூத்தத்தத் தேன்சொரியும் பொன்னிவள நன்னாட்டில்
மாத்தத்தன் வீதியினில் வந்து."

என்றொரு கவிபாடிப் புகழ்ந்தனர். ஒருமுறை வல்லி என்னுந் தம்மை மதியாமல் இகழ்ந்தனளாக,

"கந்தமலர்ப் பிரமன் கன்னிமட வார்க்கெல்லாம்
அந்தவிள நீரைமுலை யாக்கினான்—சுந்தரஞ்சேர்
தோற்றமிகு வல்லிக்குத் தோப்பைமுலை யாக்கினான்
ஏற்றிமிதில் யார்தா னியம்பு."

என்றொரு கவிபாடிப் பரிகசித்தனர். ஒருகால் இவர் திருவிடைமருதூருக்குச் சென்றிருந்தபொழுது அங்குள்ள தாசிகள் இவருக்குப் பல உபசாரங்களைச் செய்ய உகந்து,

"வாசமலர் மடந்தை போல்வார் மருதவனத்
தீச னடியா ரெழுபதின்மர்—நேசித்
திரவலர்மே னீட்டுவர்கை யிவ்வுலகை யாளும்
புரவலர்மே னீட்டுவர்பொற் றாள்."

என்றொரு கவிபாடி அவர்களைப் புகழ்ந்தனர். ஒருமுறைப் பாண்டியநாட்டுக்குச் சென்றபோது அந்நாட்டரசன் மனைவியுபசாரங்களுக்கு மகிழ்ந்து,

"உமையாளு நீயு மொருங்கொப்பே யொப்பே
உமையாளுக் குண்டங்கோ ரூன—முமையாடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனின்
ஆகந்தோய்ந் தாண்டா னரசு."

என்றொரு கவிபாடிப் புகழ்ந்தனர். கம்பராற் பாடப்பெறுதலை விரும்பிய ஒருகைக்கோளன் தன் கருத்தைத் தன்மனைவிக்குத் தெரிவிக்க அவள் தன் கணவனை ஒளித்திருக்கச்சொல்லி நமது கவிநாதரைத் தன் போர்வேலென மிளிரும் பூங்கண்ணால் மருட்டி வீட்டுக்கு வருவித்துப் படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றனள். உடனே மறைந்திருந்த கைக்கோளன் ஒரு குறுந்தடியைக் கொண்டுவந்து அவரை அடிக்க வரும்போது அவர் அஞ்சி அச்சமுற்று,

"மய்க்கிணையான விழிக்கணைகொண்டு மருட்டி யழைத்திடலால்
பொய்க்களவாகப் புகுந்ததுமுண்டு புணர்ந்தது மில்லையடா
கய்க்கிசைவான குறிந்தடிகொண்டு கழுத்தை நெரிக்கவரும்
கய்க்களவாவென்றங் கையடா நின்றூ மடாவிடடா."

என்றொரு கவிபாடி அவனை வேண்டினர். அவன் புன்னகை கொண்டு உண்மையை அவருக்குத் தெரிவித்து அவரைத் தேற்றி அனுப்பிவிட்டனன். பிறகு ஒருவலையனுடைய வீட்டிலும் அவ்வாறே அகப்பட்டுக்கொண்டு,

"இருளை யிருள்விழுங்கி யெவ்விடமுந் தோன்றூ
திருவிழியுங் கோல்வழியே செல்ல—வருமல்வில்
வந்ததுண்டு சேர்ந்ததில்லை மாலேயல் லாமலே
அந்தமனை யுன்றன்மனை யே."

என்னுங் கவியைப் பாடினர் என்பர். பிறகு அன்புடன் அநேக நாளாய்த் தம்மை ஆதரித்துவந்த சடையப்பமுதலியார் மனங் களிப்பத் தமது குலத்தவர்களாகிய வேளாளர்களைப் புகழ்ந்து ஏரெழுபது என்னு நூலையும் திருக்கைவழக்கம் என்னு நூலையும் வன்னியரைப் புகழ்ந்து செம்போற்சிலை என்னு நூலையும் பாடினர்.

ஒருமுறைத் தமது மாணவராகிய ஏகம்பவாணரென்னும் பிரபுவினிடஞ் சென்றனர். அவர் மிக்க வணக்கத்துடனும் அன்புடனும் வரவேற்று உபசரித்துச் செய்த சிறப்புக்குகந்து,

"போரரசர் தேவிமார் பெற்ற மதலையர்தம்
மார்பகலங் கண்டு மகிழ்வரோ—போர்புரிய
வல்லா னகளங்கன் வாணன் றிருநாம
மெல்லா மெழுதலா மென்று." எனவும்,

"உலக்குரிய பண்ட மூவந்திரக்கச் சென்றால்
கொலைக்குரிய வேழங் கொடுத்தான்—றலைக்குரிய
வாணர்கோ னுறை மகதேவ னுக்கிந்தப்
பாணனோ டென்ன பகை." எனவும்,

"வாணன் பெயரெழுதா மார்புண்டோ மாசுதர்கோன்
வாணன் புகழுரையா வாயுண்டோ—வாணன்
கொடிதாங்கி நில்லாத கொம்புண்டோ வுண்டோ
அடிதாங்கி நில்லா வரசு." எனவும்,

"பாண்டியனைப் பேர்மாற்றிப் பாணர்க் கரசளித்த
வாண்டகை யென்றன்னை யறியேனோ—மூண்டெழுந்த
கார்மாற்றுஞ் செங்கைக் கடகரிவா ணுவனது
பேர்மாற் றுவதரிதோ பேசு." எனவும்,

"பாணன் மதுரைப் பதியாள வைத்தபிரான்
வாணர் புகழவரு மேகம்ப—வாணன்

கருர்போ தகமேனின் கால்பணிவேன் மீண்டு
வரும்போ தகமே வரின்." எனவும்,

"என்கவிகை யென்சிவிகை யென்கவச மென்றுவசம்
என்கரியீ தென்பரியீ தென்பரே—மன்கவனம்
மாவேந்தன் வாணன் வரிசைப் பரிசுபெற்ற
பாவேந்தரை வேந்தர் பார்த்து." எனவும்,

"சேற்றுக் கமலவயற் றென்றுறை வாணனையான்
சோற்றுக் கரிசிதாச் சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன்
அளிக்குமா றெவ்வா றவன்." எனவும்,

"அலங்க லணிமார்ப றுறையர்கோன் வாணன்
விலங்கு சொடுவருக வென்று—னிலங்கிழையீர்
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விளம்பு." எனவும்,

"வாணன் புகழ்க்கெல்லை வாழ்த்துவோர் நாவெல்லை
வாணன் புகழ்க்கெல்லை மண்ணெல்லை—வாணன்
படைக்கெல்லை திக்கெல்லை பைந்தமிழ்தேர் வாணன்
கொடைக்கெல்லை யேற்றவர்தங் கோள்." எனவும்,

"வாட்டானைத் தென்னவர்கோன் மாகதற்குத் தோற்றசெய்தி
கேட்டானைத் தீங்குடலுங் கேட்டதற்பின்—நாட்டம்
பொருந் ாயிரவிழியான் பொன்முடியைச் சாய்த்தங்
கிருந்தானிங் கென்றுந் மென்று." எனவும்,

"தேருளைப்புரவி வாரணத்தொகுதி திறைகொணர்ந்துவரு மன்னநின்
தேசமேதுனது நாமமேதுபுகல் செங்கையாழ்தடவு பாணகேள்
வாருமொத்தகுடி நீருநாமுமக தேவனுறைநகர் காவலன்
வாணபூபதி மகிழ்ந்தளிக்கவெகு வரிசைபெற்றுவரு புலவன்யான்

நீருமிப்பரிசு பெற்றுமீண்டுவர லாகுமேகுவன் முன்றில்வாய்
நித்திலச்சிகர மாடமாளிகை நெருங்தகோபுர மருங்கெலாம்
ஆருநிற்தமுயர் வேம்புநிற்தம்வளர் பனையுநிற்குமத னருகிலே
யாசுநிற்தமா சைச்சுமந்தசில வத்திநிற்த மடையாளமே." எனவும்
புகழ்ந்து பாடினர்.

---

## மூன்றாம் அத்தியாயம்.

அக்காலத்துச் சோழநாட்டை யாண்டுவந்த குமாரக் குலோத்துங்கன் தன் சபையில் வீற்றிருக்கும் ஒட்டக்கூத்தர், புகழேந்தி என்னும் பெரும்புலவர்களோடு அருங்கலைகளை ஆய்தலையே விநோதமாகக்கொண்டிருந்தான். அவன் நமது கவிஞர்பெருமானது பெரும்புகழைக் கேட்டுத் தன்னிடத்து வருவித்து, உபசரித்து, ஓர் உயர்ந்த ஆசனமிடுவித்து, அதிலவரை வீற்றிருக்கச் செய்து, அவரை நோக்கி, "கவிஞர்பெருமானே! தாங்கள் எந்தவூர்?" என்று கேட்டான். நங்கவிநாதர் தமது நாடாகிய கம்பநாட்டைக் கூறுமல்

"மோட்டெருமை வாவிபுக முட்டவரால் கற்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லு
முடையான் சடையன்ற னூர்."

என்று தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலின் ஊரையே புகழ்ந்து தமது ஊராகக் கூறினர்.

அதைக்கேட்ட குலோத்துங்கன் அவரது கல்வியின் சிறப்பைப்போலவே குணச்சிறப்பு மமைந்திருத்தலைக்கண்டு மிகவு மகிழ்ந்து அவரைத் தம்மிடம் தமது சமுகத்து வித்துவான்களுக்குத் தலைவராய் வீற்றிருக்கும்படி செய்தனன். அவரும் சமயம் நேர்ந்தபோதெல்லாம் பல அரிய விஷயங்களை அவனது மனங்களிக்கும்படி எடுத்துரைத்துச்சந்தோஷிப்பித்துவந்தனர்.

இங்ஙனஞ் சிலகாலஞ் செல்லச் சடையப்ப வள்ளலார் "வடமொழியில் ஆதிகவியாகிய வால்மீகமுனிவரால் இயற்றப் பெற்றதும், காவியங்களுக்குள் சிரேஷ்டமாகியதுமான ராமாயணத்தைத் தமிழிற் பாடுவிக்கின் அது தமிழுலகத்திற்குப் பேருபகாரமாம்" என்று கருதி ஒருமுறை நங்கவிசிரேஷ்டரை நோக்கி "அன்புமருளுமிக்க அருங்கவிப் புலவரேறே! நுமது பெரும்புலமைத்திறமும் நுமது பெயரும் என்றும் எவர்க்கும் புலனும்படி ராமாயணமென்னும் பாரகாவியத்தைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடித்தருதல் வேண்டும்" என்றுகூறினர். நந்தமிழர் புகழ்விளங்கவந்தகம்பநாடர் "அங்ஙனமேசெய்கின்றேம்?" என்றிசைத்தனர். ஆயினும் நெடுங்காலம் வரையினும் அங்ஙனஞ் செய்யாது காலந்தாழ்த்தனராக வள்ளற்றலைவர் "இவர் நம்மிடங்கொண்ட சுதந்தரத்தால் இங்ஙனம் தாமதமாயிருக்கின்றனர். அரசனைக்கொண்டு சொல்வித்தால் ராஜாதிகாரத்துக்கு அஞ்சி விரைவிற் செய்துமுடிப்பர் என்றுன்னித் தமது கருத்தைக் குமாரகுலோத்துங்கனுக்குத்தெரிவித்தனர்.

அவ்வரசர்பிரான் அதைக்கேட்டு ஆலோசித்து "நாம் இவரைமாத்திரம் பாடும்படி கூறினல் இவர் விரைந்து பாடி முடியார். இவருடன் ஒட்டக்கூத்தரையும் பாடும்படி உரைப்பின் "கூழுக்கு மாங்காய் தோற்குமா" என்கிறபடி ஒருவரையொருவர் முந்தவேண்டி இருவரும் விரைவிற் பாடிமுடிப்பார்கள்" என நினைந்து நம்புலவர்க்கரசரையும், ஒட்டக்கூத்தரையும் சபைக்கு வரவழைத்துச் சொல்ல, இருவரும் அதற்கிசைந்து அரசனிடம் விடைபெற்றுச் சென்றனர். அவர்களில் ஒட்டக்கூத்தப்புலவர் அரசன் கட்டளைப்படி உடனே பாடத்தொடங்கி, ராமாயணத்தின் காண்டங்கள் ஏழனுள் முதலைந்து காண்டங்களையும் பாடி முடித்து ஆறுவது காண்டமாகிய யுத்தகாண்டத்திலும் கடல்காண் படலம்வரையினும்

பாடினர். கம்பநாடர் அதுவரையினுங் கடவுள் வணக்கமும் பாடிற்றிலர். அதனை யுணர்ந்த அரசர்பிரான் அவ்விருவரையுஞ் சபைக்கு வருவித்து முதலில் ஒட்டக்கூத்தரை நோக்கித் "தாங்கள் ராமாயணத்தில் எதுவரையினும் பாடியிருக்கின்றீர்கள்?' என, அவர் "நாம் யுத்தகாண்டத்தில் வருணனை வழிவேண்டுபடலம் வரையினும் பாடியிருக்கின்றோம்" என்று கூறினர். பிறகு மன்னர்பெருமான் கம்பநாடரைப் பார்த்துத் "தாங்கள் எவ்வளவுதூரம் பாடியிருக்கின்றீர்கள்?" என்று கேட்க, அவர் "நாம் இப்பொழுது இவரினும் அதிகமாகப் பாடியிருப்பதாகக் கூறுதல்வேண்டும், இன்றேல் நமக்கின்று அவமதிப்புண்டாம், "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்பது பொய்யாமொழியன்றே, ஆகலான் இச்சமயம் நாமொரு பொய் சொல்வது குற்றமாகாது" என்றுன்னித் துணிந்து "நாம் வருணனை வழிவேண்டு படலத்திற்குப் பின்னுள்ள சேதுபந்தனப்படலம்வரையினும் பாடியிருக்கின்றோம்" என்றனர்.

"அப்படியா? ஆனல், அதிற் சில செய்யுட்களைக் கூறிப் பொருள் கூறுங்கள்" என்று அரசன் சொல்ல, நம் கவிஞர் பெருமான் அப்படலத்தை உடனே தம்மனத்துள் எழுபத்தொரு செய்யுட்களாற் பாடிக்கொண்டு பிரசங்கிக்கத் தொடங்கி நாற்பத்திரண்டாவது செய்யுளாகிய

"குமுத னிட்ட குலவரை கூத்தரில்
திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
துமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்னு மெழுமெனு மாசையால்."

என்னும் பாடலைச்சொல்லி "குமுதன் என்னும் படைத்தலைவன் தான் கொண்டுவந்த மலையை மற்றவர்களைப்போல நளன்

என்னுந் தெய்வத்தச்சன் கையிற் கொடாமல் தானே விட்டெறிந்த மலைபானது கூத்தாடிகளை பொப்பத் திமிதம் என்னும் ஒலியினைச் செய்து சுழலுதலால் திரைத்த கடலின்நீர் விசைத்துவந்து தமது சொர்க்கத்திற் புகுதலால் அதைக் கண்ட தேவர்கள் பரமபதநாதனருளால் நாம் பாற்கடலைக் கடைந்தபோது அதில் உண்டான அமுதத்தோடு இன்னும் அதிகமான அமுதம் (அவ்விறைவன்றன் அவதாரமாகிய இந்த ஸ்ரீராமபிரானது அருளைப்பெற்று நம்முடைய அம்சங்களினல் தோன்றிய இந்த வானரவீரர்கள் இக்கடலைக் கடைதலால்) உண்டாகும் என்னும் ஆசையினல் துள்ளி யாடினுர்கள்" என்று பொருள் கூறினர்.

அதுகேட்டு ஒட்டக்கூத்தர் கம்பநாடரைநோக்கி, "துளிக்குத் துமிதம் என்னும் பெயர் நிகண்டு, திவாகரங்களில் இருக்கின்றதா? அன்றி இலக்கியங்கள் எதிலேனும் இருக்கின்றதா?" என்னக் கம்பநாடர் அவற்று ளெல்லாமில்லை. உலகவழக்கிலிருக்கின்றது" என்றனர். ஒட்டக்கூத்தர் "அங்ஙனமாயின் அதை மெய்ப்பிக்கவேண்டும்" என்னக் கம்பநாடர், "அங்ஙனமே நாளைபதினம் மெய்ப்பிக்கின்ருேம்" என்று பிரசங்கத்தை முடித்து வீட்டுக்குச் சென்று கலைவாணியைப் பிரார்த்திக்க, அத்தேவியும் எதிர்த்தோன்றி "அன்ப! நினக்கு வேண்டுவதென்" என்ன கம்பநாடர், "தாயே! நீ என்னுவிலிருந்து சொல்லி ருளிய செய்யுட்களி லொன்றிலுள்ள துமிதம் என்னும் பதத்தைப்பற்றி ஒட்டக்கூத்தன் அது எங்கிருக்கின்றது என்று ஆக்ஷேபிக்கின்ருன். யான் அது உலகவழக்கி லிருக்கின்றதென்று கூறிவிட்டேன். அதை மெய்ப்பிக்கவேண்டும்" என்றனர். "அங்ஙனமாயின் நாளைபதினம் பொழுதுவிடியச் சாமநேரத்தில் அவனை இடைத்தெருவில் அழைத்துவருக" என்றுரைத்துப் போயினள்.

கம்பநாடர் அங்ஙனமே மறுநாட்காலையில் ஒட்டக்கூத்தரையும் குமாரகுலோத்துங்கனையும் இடைத்தெருவிற்கு அழைத்துச் சென்றனர். அப்போது அத்தெருவின் ஒருபக்கம் ஒரு சிறுகுடிசையில் வெற்பன கொங்கை முத்தொடு குலுங்கவும், அருங்கவிக்கணி செபு மருங்குறவருந்தவும், கலகலவென்ன வளையின மொலிப்பவும், செயிர்தீர் முத்தென வெயர்வே யரும்பவும் தயிர் கடையாநின்ற, கலைநிறை மதியன வெழினிறை முகத்தோர், அற்புதம் விளக்கும் பொற்புறுபாவை, தன்னைச் சுற்றிநின்றுடுஞ் சிற்றிளமகாரை நோக்கி "மக்காள்! உங்கள் மேல் மோர்த்துமி தெரிக்கும்; சற்று எட்டி இருங்கள்" என்றனள். அதைக்கேட்டுக் கம்பநாடர் உடனே ஒட்டக்கூத்தரை நோக்கிக் "கேட்டீரா?" என்ன, அவர் "ஆம், கேட்டோம்" என்று கூறித் தமக்குள் "இந்தஇடம் நேற்றுவரையினும் வெற்றிடமாயிருந்த தன்றே! இதற்குள் இங்கு இச்சிறுகுடில் எவ்வாறுண்டாயிற்று? இதிற் சிறுமகாருடன் இருக்கும் இந்நங்கையாவள்? பார்க்கவேண்டும்?" என்றெண்ணி அருகிற் சென்றனர். சென்றவுடன் அச்சிறுகுடின் முதலியவற்றோடு அந்நங்கை மறைந்துபோகக் கூத்தர் ஆச்சரியமும் அச்சமு மெய்திக் கண்களில் நீர்ததும்ப, "நன்று, நன்று, சாரதையின் லீலை இருந்தவாறு, அத்தேவியின் அருளை முழுதுங் கொள்ளைகொண்டுள்ள இக்கம்பநாடரை நாம் எதிர்ப்பது தகுதியன்று" என்றுன்னி அவருகிற்சென்று அவரைப் புகழ்ந்து தமதிருப்பிடஞ் சேர்ந்தனர்.

. .

பிறகு கம்பநாடர் தமதிருப்பிடமாகிய திருவெண்ணெய்நல்லூருக்குச் சென்று வடமொழியில் வல்ல பிராமணர்களை வைத்துக்கொண்டு வால்மீகம், போதாயனம், அத்மியாத்துமிகம் என்னும் இராமாயணங்களையும் புராணங்களையும் நன்காராய்ந்து பாடவேண்டிய வகையை முன் னய்ந்துகொண்டு

நல்லநாள் பார்த்துப் பாடத்தொடங்கி நாளொன்றுக்கு எழுநூறு பாடல்களைப் பாடினர். அங்ஙனம் அவர் பாடுகையில் அவரிடமுள்ள கற்றுச்சொல்லிகள் பேருக்கு எழுபது, எண்பதாக எழுதி வந்தார்கள். இங்ஙனம் அவர் ஒரு பக்ஷத்தில் பாலகாண்டமுதல் யுத்தகாண்டம்வரையில் ஆறுகாண்டங்களையும் பதினாயிரத்துச் சில்லரைப் பாடல்களாற் பாடிப் பூர்த்தி செய்தனர். பிறகு ராஜசமுகஞ் சென்று இடையிடையே சில செய்யுட்களைப் பிரசங்கித்து வந்தனர். அச்சமயத்தில் ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்துடன் எழு காண்டங்களையும் பாடிமுடித்திருந்தனர். அவர் நங்கவிஞர்பெருமான் இராமாயணத்தின் சொற்பொலிவையும், பொருட்பொலிவையுங் கேட்டு "இவருடைய ராமாயணத்துக்குமுன் நம்முடைய ராமாயணம் இருப்பதிற் பயனில்லை" என்றெண்ணி ஒருநாள் தாம் பாடிய ராமாயணமுள்ள ஓலைப்புஸ்தகங்களை எடுத்துக் கிழிக்கலானார். அச்சமயம் நங்கவிநாதர் வதோகாரணமாய் அங்குச் சென்றவர் ஒட்டக்கூத்தர் இராமாயணத்தைக் கிழித்தெறிதலைக் கண்டு அவர் கையைப் பற்றிக்கொண்டு எஞ்சிநின்ற பாகம் யாதெனப் பார்த்து அது உத்தரகாண்டமா யிருக்கக்கண்டு, கூத்தனை நோக்கி "ஐபா!" யான் யுத்தகாண்டத்தோடு ஆறுகாண்டங்களை பாடியிருக்கின்றேன். உத்தரகாண்டத்தைப் பாட எனக் கிஷ்டமில்லை. ஆகையால் இதனை அவற்றுடன் சேர்த்து எழுகாண்டமாக்கிக் கொள்ளுகின்றேன்" என்றனர். ஒட்டக்கூத்தரும் அதற்கிசைய நங்கவிப்பெருமானார் அதனைக் கொண்டுபோய் அவ்வாறே தமது ராமாயணத்தோடு சேர்த்துக்கொண்டு அரசனது சமுகஞ்சென்று காட்டினர். அரசன் அதனைக் கண்டு மிகவுஞ் சந்தோஷித்து அவரை நோக்கிப் "புலவர்பெருமானே! இது இராமாயணமாதலின் இதற்கு வைஷ்ணவ சிரேஷ்டர்களின் அங்கீகாரம் வேண்டும், ஆகையால் இதனைக் கொண்டுபோய் ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றுதல்

கொண்டு வாருங்கள்" என, அவரும் அதற்கிசைந்து அங்ஙனமே ஸ்ரீரங்கத்திற்குக் கொண்டுபோயினர்.

## நான்காம் அத்தியாயம்.

அங்ஙனஞ் சென்ற நங்கவிநாதர் அங்குள்ள வைஷ்ணவர்களுக்கு அவ்விராமாயணத்தைக் காட்டித் தாம் வந்த வாலாற்றைத் தெரிவிக்க, அவர்கள் "புலவர்பெருமானே! தாங்கள் பாடிய இந்த அரிய இராமாயணத்தை இங்கு அரங்கேற்றுவித்தலில் எங்களுக்கு யாதோ ராக்ஷேபணையுமில்லை. ஆயினும், தில்லைத் தீக்ஷிதர் தமிழிற் சிறந்த புலவர்களாயிருக்கின்றார்கள். அவர்கள் பிறகு இதனை ஆக்ஷேபித்தல்கூடும். ஆகலின் அவர்கள் அங்ஙனஞ் செய்யாதவண்ணம் அங்குச் சென்று அவர்களின் அபிப்பிராயத்தைப் பெற்றுக்கொண்டுவாருங்கள்" என்றார்கள். அவரும் அவ்வாறே தில்லைக்குச் சென்று தீக்ஷிதர்களில் முக்கியமானவர்களாகிய சிலரைக் கண்டு தமது கருத்தைத் தெரிவித்தனர். அவர்கள் "நாங்கள் மூவாயிரம்பெயருங் கூடினாலன்றி இதற்குப் பதில் சொல்லமுடியாது" என்றார்கள். நங்கவிநாதர் அதைக்கேட்டு அங்குநின்றுஞ் சென்று வேறு சில தீக்ஷிதர்களைக் கண்டு தமது கருத்தைத் தெரிவித்தனர். அவர்களும் அப்படியே சொல்ல, அவர் "இஃதென்ன ஊர்கூடிச் செக்குத் தள்ளவேண்டியதா யிருக்கின்றதே. இவர்கள் மூவாயிரவரும் ஒன்றுய்க்கூடுவ தெப்போது? நமக்கு அபிப்பிராயங் கொடுப்ப தெப்போது? இதற்கென்செய்வேன்" என்று மிகவு மனவருத்த மெய்தினவராய்ச் சில தினங்கள் அங்குத் தங்கியிருக்க, ஒரு நாள் இரவு அவரது கனவில் தீநதயாளனை ஸ்ரீதரன் எழுந்தருளி "அன்பனே! அஞ்சற்க! நாளைய தினம் உதயத்தில் இம்மூவாயிரவரில் ஒரு தீக்ஷிதனுடைய புத்திரன் பாம்பு தீண்டி இறந்துபோவான். அப்போது அந்தத் தீக்ஷிதன் வீட்டிற்கு மற்றைத் தீக்ஷிதர்கள் யாவரும் வந்து சேருவார்கள். அச்சம

யம் நீ அங்குச் சென்று நாகபாசபடலத்திற் சில செய்யுட்களைப் படிப்பாயானால் அப்பிள்ளை உயிர்த்தெழும். அதைக் கண்டமாத்திரத்தில் அவர்கள் யாதொரு தடையுமின்றி அபிப்பிராயங் கொடுப்பார்கள்" என்று கூறியருளிப் போயினர்.

அங்ஙனமே நங்கவிஞர்பெருமான் எழுந்துபோக ஒரு தீக்ஷிதர் வீட்டில் மற்றைய தீக்ஷிதர்கள் யாவரும் ஒருங்குகூடியிருக்க அவர்களைக் கண்டு "மறைவலாளர்களே! நீங்கள் கூறியபடி இன்று யாவரும் ஒருங்கு கூடியிருக்கின்றீர்கள்; ஆகையால், எனது இராமாயணத்திற்கு அபிப்பிராயந் தந்தருளல்வேண்டும்" என, அவர்கள் "நன்று, நன்று, உம்முடைய செய்தி. 'குழந்தையைப் பெற்றேன் குழந்தைக் கழுதையில் பணிச்சவன் காசுக் கழுதான்' என்பதுபோல் இருக்கின்றது. இவ்வீட்டுக்குரியாது குழந்தை இறந்துபோனதன் பொருட்டு நாங்கள் யாவரும் இங்கு வந்திருக்கின்றோம். இச்சமயத்தில் வந்து நீர் எங்களை அபிப்பிராயங் கேட்பது நன்றாயிருக்கின்றது" என்றார்கள். அதைக் கேட்ட நம் புலவர்பெருமான் "அருமறையாளர்களே! அக்குழந்தை என்னநோய்கண்டு இறந்துபோயிற்று" என, அவர்கள் "பாம்புகடித்து இறந்துபோயிற்று" என்று வீட்டிற்குள் அழைத்துச் சென்று குழந்தையைக் காட்டினார்கள். நம்மரும்புலச் சிரேஷ்டர், "வான்மறைச் செல்வர்களே! இக்குழந்தையை நான் எழுப்பித்தந்தால் எனது இராமாயணத்துக்கு அபிப்பிராயங் கொடுப்பீர்களா?" என, அவர்கள் "புலவர்க்கரசரே! தாங்கள் இக்குழந்தையை யெழுப்பித்தந்தால் தங்கள் இராமாயணத்துக்கு அபிப்பிராயங் கொடுப்பது மாத்திரமல்ல; தாங்கள் இன்னும் எவ்வளவு அரியபொருள்களைக் கேட்பினுங் கொடுத்துவிடுவோம்" என்றனர்.

உடனே நங்கவிநாதர் திருநாதர் பணித்தருளியவண்ணம் யுத்தகாண்டத்தில் நாகபாசப்படலத்திலிருந்து,

"பல்லாயிரத்தின் முடியாதபக்கமவைவீசவந்தபடர்கால்
செல்லாநிலத்தினருளோடுசெல்லவுடனின்றவாளிசிதறுற்
றெல்லாமவித்துமுணர்வோடுமெண்ணியறனேவிளாக்குமுராமோன்
வல்லாவொருத்தனிடையேபடுத்தவருவானமேனிவடிவும்."

"வாசங்கலந்தமரைநாளநூலின்வகையென்பதென்னைமழையென் [கும்
ருசங்கைகொண்டகொடைமீளியண்ணல்சாராமன்வெண்ணெயணு
தேசங்கலந்தமறைவாணர்செஞ்சொலறிவாளரென்றிமுதலோர்
பாசங்கலந்தபசிபோலகன்றபதகன்றுராந்தவுரகம்."

என்னும் இவைமுதலிய சில செய்யுட்களைப் படித்துப் பிறகு

"ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே - ஆழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட." எனவும்,

"மங்கைபொரு பாகன் மணிமார்பி லாரமே
பொங்குகடல் கடைந்த பொற்கயிறே - திங்களையுஞ்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பாம்பே யிறங்கு." எனவும்,

"பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே - யீரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுகடயாய் தூர நட," எனவும்

புதுவனவாக மூன்று வெண்பாக்களையும் பாடினர். உட னே அங்கொரு புற்றினின்று ஒரு நல்லபாம்பு யாவரும் பார்த் துக்கொண்டிருக்க வந்து அக்குழந்தையை யணுகி முன்பு கடி த்தவாயில் மீண்டுங்கடித்துத் தலைக்கேறின விஷத்தை மீட்டுக் கொண்டு திரும்பிச் சிலதூரஞ்சென்று இறந்தது. உடனே அக்

குழந்தை நித்திரையினின்றெழுவதுபோல உயிர்த்தெழுந்தது. அவர்கள் ஆநந்தபரவசர்களாய் அவரைப் பலவாறு புகழ்ந்து இராமாயணத்திற் சில கேள்விகளைக் கேட்டுப் பிறகு தங்கள் அபிப்பிராயங்களைக் கொடுத்தனர். அதைப் பெற்றுக்கொண்டு நந்தங் கவிஞர்பெருமான் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று அதனைக் காட்ட, அவர்கள் மீண்டும் மாவண்டூரிலிருந்த பண்டித சிரேஷ்டனென்னுங் கருமானிடத்திலும் தஞ்சாவூரிலிருந்த அஞ்சனாக்ஷி என்னுந் தாசியினிடத்திலும், நந்தங்கவிநாததாது புத்திரனாகிய அம்பிகாபதியினிடத்திலும் அபிப்பிராயம் வாங்கி வரச் சொல்ல, அவரும் அப்படியே வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தனர். அச்சமயத்தில் அங்கு ஞானாதிகராய் விளங்கிய ஸ்ரீமந் நாதமுநிகள், அங்கெழுந்தருள, அவரையே சபாநாயகராக வைத்துக்கொண்டு அரங்கேற்றுதல் செய்யத் தொடங்குகையில், ஸ்ரீரங்கநாதர் அர்ச்சகன்மீது ஆவிர்ப்பவித்து "கம்பநாடனே! நீ நஞ்சடகோபனைப் பாடினையோ? பாடினால்தான் நாம் உனது இராமாயணத்தை அங்கிகரிப்போம்" என, உடனே நங்கவிநாதர் சடகோபர் அந்தாதி என்னும் பேரால் சடகோபர் என்னுந் திருநாமத்தினையுடைய நம்மாழ்வார் விஷயமாக நூறு பாடலைப் பாடினர். பிறகு இராமாயணம் அங்கு அரங்கேற்றப்பட்டது. பிறகு அங்குச் சபாநாயகராக வீற்றிருந்த ஸ்ரீமந் நாதமுநிகள் நந்தங்கவிநாதருக்குக் கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டஞ் சூட்டிப் பல மரியாதைகளுஞ் செய்வித்து அவரை மகிழ்வித்தனர். அவரும் அவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு அரசனை அணுகினர். அரசனும் பேராநந்தத்தோடு அவரை வரவேற்றுபசரித்தனன்.

## ஐந்தாமத்தியாயம்.

பிறகு அரசன் சமுகத்திலும் இன்னும் பல அரசர்களும் புலவர்களுஞ் சூழ்ந்திருக்க நங்கவிச்சக்கரவர்த்தி நடுநாயக

மாக அவர்கள் மத்தியில் வீற்றிருந்து அரங்கேற்றினர். அரச னும் மற்றவர்களும் அளவிறந்த மகிழ்ச்சியை யடைந்து கம்ப ரைப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினார்கள். இங்ஙனமிருக்க, ஒருநாள் ஒரு விறகுதலையன் மனைவி "கம்பர் முதலியோர் அர சன்மீதும், மற்றும் பல விஷயங்களைப்பற்றியும் பாட்டுப்பாடிச் சுகமாகச் சீவித்துக்கொண்டிருப்ப நமது நாயகர் மாத்திரம் காட்டிற்குச் சென்று கட்டை வெட்டி கஷ்டப்படுவானேன்" என்று தனக்குள் யோசித்து, வெளியிற் சென்றிருந்த தன் கணவன் வந்தவுடன் அவனிடம் தன் கருத்தைத் தெரிவித்த னள். "அப்படியானால் நான் சென்று பாட்டுக்கற்றுக்கொண்டு வருகின்றேன்" என்று வெளியிற்சென்றான். செல்கையில் மரப் பாவையை வைத்துக்கொண்டு விளையாடுஞ் சிறுபிள்ளைகள் "மண்ணுண்ணி மாப்பிளையே" என்று சொல்லக்கேட்டு அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அப்பாற் சென்றான். அங்ங னஞ் செல்கையில் வழியில் ஒரு காக்கை 'கா' என்று கத்தக் கேட்டுக் "காவிறையே" என்றும், அப்பால் ஒரு சோலையிற் குயில் கூவக்கேட்டுக் "கூவிறையே" என்றும், ஒரு பிள்ளையார் கோயிலில் ஒரு பெருச்சாளி ஓடக்கண்டு "உங்களப்பன் கோ வில் பெருச்சாளி" என்றுஞ் சில சொற்களை அமைத்து முன் னதனோடு கூட்டிப் பாடம் பண்ணிக்கொண்டு திரும்பினான். திரும்பிவருகையில் ஒரு சிநேகன் எதிர்ப்பட்டு "எங்குப்போய் வருகின்றாய்?" என்று கேட்க, விறகுதலையன் தான் போய்வருஞ் செய்தியையும் தான் பாடம்பண்ணிக்கொண்டு வந்ததையுங் கூறி "நீயும் ஏதேனுங் கற்பிக்கவேண்டும்" என்றான். அவன் "கற்பிக்கிறதென்னடா, கன்னா பின்னா மன்னா தென்னா என்று பாடுகிறதுதானே" என்றான். விறகுதலையன் அதையும் பாட் டென்றே எண்ணி முன்னதனோடு கூட்டிப் பாடம்பண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்து தான் பாடம்பண்ணிக்கொண்டு வந்ததைத் தன் மனைவியிடங் கூறினான். அவள் அரசன் பெயர்-

இல்லையே என்றெண்ணிச் "சோழராங்கப்பெருமானே" என்பதையும் உடன் கூட்டிக்கொள்ளச் சொன்னாள். பிறகுதலையன் அவ்வாறே உடன் கூட்டிக்கொண்டு அரசன் சமுகத்தையடைந்து அங்கு அரசன் பக்கத்தில் வீற்றிருக்கும் புலவர்களில் நங்கவிச்சக்கரவர்த்தியாரை நோக்கி, முன்னே நமஸ்கரித்துப் பிறகு தான் அரசன்மீது பாட்டுப்பாடிக்கொண்டு வந்திருப்பதாகக் கூறித் தான் பாடம்பண்ணிக்கொண்டு வந்ததையுஞ் சொல்லிவிட்டான். அதைக்கேட்ட மாத்திரத்தில் அங்கிருந்தவர்களில் நங்கவிச்சக்கரவர்த்தியாரை யொழிந்த மற்றையயாவருங் குலுங்கக் குலுங்க நகைத்தனர். அப்போது நங்கவிச்சக்கரவர்த்தி "நீங்களெல்லாம் ஏனோ இப்படி வீணாக வந்தவாது நிறத்தையும், அவர் கூறியது இன்ன செய்யுள் என்பதையும், அதன் பொருள் இன்னதென்பதையும் உணராமல் சிரிக்கின்றீர்கள்?" என, ஒட்டக்கூத்தர் "ஆனால் அது இவ்வகைச் செய்யுள் என்பதையும் அதன் பொருளையுந் தாங்களே கூறுங்கள்" என்றனர். உடனே நங்கவிச்சக்கரவர்த்தி இது,

"மண்ணுண்ணி மாப்பிளேயே காவிறையே கூவிறையே!
உங்களப்பன் கோவிற் பெருச்சாளி
கன்னா பின்னா மன்னா தென்னா
சோழராங்கப் பெருமானே"

என்று இடையிடையே சில சீர்குறைந்து முடிந்திருத்தலால் இணைக்குறளாசிரியப்பாவாகும்.

(இ-ள்.) மண் - பூமியை, உண்ணி - உண்டவனே, மா - இலக்ஷ்மியின், பிள்ளேயே - புதல்வனே, கா - கற்பகத்தருவிற்கு, இறையே-தலைவனாகிய இந்திரனே, கூ-பூமிக்கு, இறையே - அரசனே, உங்களப்பன்-உங்கள் தந்தை, கோ - அரசன், வில் - நீ விற்போரில், பெரிசு ஆளி - பெரிதாகிய சிங்கம்போல்வாய், கன்னா - கன்னனே, பின்னா மன்னா - அவனுக்குப் பின்

னுகிய தருமாசனே, சோழ அங்கம் - சோழதேசமாகிய அங்கத்தினை (உடலை) யுடைய, பெருமானே - பெருமையை யுடையவனே, என்பது. இது பதவுரை.

நீ விஷ்ணுவின் அமிசம் பெற்றவன் என்பார் 'மன்னுண்ணி' என்றும், செல்வத்திற் சிறந்த வளவன் என்பார் 'மாப்பிள்ளை' என்றும், போகத்தால் இந்திரனை யொப்பாய் என்பார் 'காவிறையே' என்றும், "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடைய தரசு" என்றபடி நீ அரசர்க்கோதிய அறத்தின் வழுவாதொழுகி அறன் அல்லவை நின்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினையுடைமை யாதலால் நீயே இவ்வுலகுக்கு அரசன் எனத்தக்காய் என்பார் 'கூவிறையே' என்றும், நீ பரம்பரையான அரசவமிசத்திற் பிறந்தாய் என்பார் 'உங்களப்பன் கோ' என்றும், நீ விற்போரிற் பகைவர் அஞ்சி நடுங்கும்படி செய்ய வல்லாய் என்பார் 'விற்பெருச்சாளி' என்றும், கொடையிற் சிறந்தாய் என்பார் 'கன்னு' என்றும், பொறையிற் சிறந்தாய் என்பார் 'பின்னு மன்னு' என்றும், தமிழைப்பேணலிற் பாண்டியனை யொத்தவனே என்பார் 'தென்னு' என்றும், "நெல்லு முயிரன்றே நீருமுயிரன்றே, மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்" என்றபடி நீ சோழநாட்டினுக்கே ஒருயிர்போல்வாய் என்பார் 'சோழ அங்கப்பெருமானே' என்றுங் கூறினர். இது பதசாரம். சோழ அங்கம் எனற்பாலது நிலைமொழி யிற்றகரந் தொக்குச் சோழங்கம் என்றாயிற்று. அங்கம் - அவயம். அது கருவியாகுபெயராய் உடலை யுணர்த்தியது. இதில் உவமை, உருவக முதலிய சில அணிகளும் அமைக்கப்பெற்றிருக்கின்றன" என்று அற்புதமாகப் பிரசங்கித்து அதனைச் சமர்த்தித்தனர். அதைக்கேட்டு அனைவரும் ஆச்சரியமெய்தி நங் கவிச்சக்கிரவர்த்தியார் தம் அருளையுந் தெருளையும் வியந்து

பதிலொன்றுங் கூறாமல் மௌனஞ்சாதித்தனர். பிறகு அரசன் நங்கவிச்சக்கரவர்த்தியாரது மனமுகக்கும்படி அவ்விறகுதலையனுக்குச் சிறந்த சன்மானங்களைச் செய்தனுப்பினன். பிறகு நம் கவிச்சக்கரவர்த்தி அவ்விறகுதலையனை வருவித்து அவனுக்குப் பல கலைகளையுங் கற்பித்துச் சிறந்த புலவனாக்கினார்.

மற்றொருகால் அம்பலசோமாசி என்னும் பெயருடைய ஒரு புலவன் நங்கவிச்சக்கரவர்த்தியிடம் பொறாமை கொண்டு அவரைத் தன் புலமையினால் வெல்லவேண்டும் என்றெண்ணி அவர் மனையை யடைந்தான். அப்போது ஆங்கு வீட்டைப் பெருக்கிக்கொண்டிருந்த வெள்ளாட்டி அந்த வித்துவானைப் பார்த்து "நீர் யார்?" என, அவன் "யாம் ஓர் சிறந்த வித்துவான், கம்பரது திறனைக் காணவந்திருக்கின்றோம், நீ விரைவிற் சென்று நம் வருகையை அவருக்குத் தெரிவிப்பாய்" என்று தன் பெயரையுங் கூறினன். அதைக் கேட்டு அவள் பக்கென்று நகைத்து "நான் ஒருபாட்டுச்சொல்லுகின்றேன். அதன் பொருளைச் சொல்லிவிடுவாயானால் உடனே போய் அவரிடம் உமது வருகையைக் கூறுகின்றேன்" என்றனள். அவன் "அப்படியே சொல்லுகின்றேன் சொல்" என, அவள்

"வட்டமதி போலிருக்கும் வன்னிக் கொடிதாவுங்
கொட்டுவார் கையினின்று கூத்தாடுஞ் - சுட்டால்
அரகரா வென்னுமே யம்பல சோமாசி
ஒருநாள்விட் டேனீ துரை."

என்றோர் வெண்பாவைக் கூறினள். அவன் அதற்குப் பொருள் சொல்ல வகைதெரியாமல் நாணத்தினால் தலையிறக்கங் கொண்டு சொல்லாமல் திரும்பிப் போய்விட்டனன்.

## ஆறாம் அத்தியாயம்.

இங்கு நங்கவிச்சக்கரவர்த்தியாரிடம் பேரன்பு பூண்டிருந்த குமாரகுலோத்துங்கச்சோழன் பரகதியடைய அவனது மகனாகிய ராஜேந்திரசோழன் தன் தந்தையைப்போலவே நங்கவிச்சக்கரவர்த்தியாரிடம் பேரன்புகொண்டு அவரை அம்மான் என்று அழைத்து வந்தனன். அவரும் அவனை 'மருமான்' என்று அழைத்துவந்தனர். ஒருநாள் மாலை அவர்கள் இருவரும் ஒரு பூங்காவில் உலாவிக்கொண்டிருக்கையில் அரசன் உடல் குலுங்கக் கலகல என்று நகைத்தான். நங்கவிச்சக்கரவர்த்தி "மருமானே! ஏன் நகைக்கின்றீர்?" என, அரசன் "எனக்கு நகைப்புவந்ததைப்பற்றி நான் என்னென்று கூறுவேன்" என்றான். அவர் "அதை நாம் அறியலாகாதோ" என, அரசன் "நீங்கள் அறியாததுமுண்டோ. இந்தராச்சியமும் இதிலுள்ள சகல பிரஜைகளும் நமக்கு ஐக்கியமல்லவா என்று நினைக்க எனக்குச் சிரிப்புவந்தது" என்றான். நங்கவிச்சக்கரவர்த்தியார் அதைக் கேட்டு "எல்லாம் உமக்கு ஐக்கியம் என்பதற்கும், நீர் நமக்கு ஐக்கியம் என்பதற்கும் யாதொரு சந்தேகமுமில்லை" என்று சொல்லித் தாமும் உடன் சிரித்தார். அந்தச் சொல் தன் காதிற் பட்டவுடனே மிகவுங் கோபங்கொண்டவனாய் அவரிடம் ஒன்றுஞ் சொல்லாமல் சரேலென அரண்மனைக்குச் சென்று பஞ்சணையிற் படுத்துக்கொண்டு "இவர் என்ன நம்மைப்போல மண்டலாதிபதியா? நமக்குக் கீழ்ப்பட்டிருந்து நாங் கொடுப்பனவற்றால் சீவிக்கும் ஒரு புலவரே யல்லரோ. இவர் நம்மைச் சிறிது மதியாமல் தமக்கு ஐக்கியமென்றாரே, இதுவோ இவர்தம்புலமைக் கழகாவது?" என்றெண்ணி முகவாட்டத்துடன் ஒருவரோடும் பேசாமலிருந்தான். அச்சமயத்தில் அரசன் மனைவி சிற்றுண்டி கொண்டுவந்து வைத்துப் புசிக்கச் சொல்லி உபசரித்தனள். அதைப் புசியாமலும் அவளுடனும்

பேசாமலும் இருக்க, அங்ஙனம் இருத்தலைக் கண்ட அரசி அரசனது அபிமானத்துக்குரியவளும், பொன்னி என்னும் பெயரையுடையவளுமான தாசியை அழைப்பித்து "அரசனைப் பலகாரம் பண்ணும்படி செய்யவேண்டும்" என்றாள். அவள் "இதோ ஒரு நொடிக்குள் செய்கின்றேன்" என்று அரசன் அருகிற் சென்று இதமான மொழிகளைக் கூறி "உமக்கு யாது வருத்தம்?" என்று கேட்டனள். அரசன் தனக்கும் நங்கவிச்சக்கரவர்த்திக்கும் நடந்த செய்தியைக்கூற, அவள் "இதற்குத்தானா நீர் இப்படி வருந்துகின்றீர். உம்மைப் பொய்யாகத் தனக்கடிமை" என்று சொன்ன அந்தக் கம்பனை மெய்யாகவே எனக்கு அடிமையாக்கிக் கொள்கின்றேன். என் சாமர்த்தியத்தைப் பாரும். நீர் பலகாரம் பண்ணும்" என்று அரசனைப் பலகாரம் உண்ணச்செய்து, தன் வீட்டுக்குச் சென்று தன் தாதியை அழைத்து, "கம்பர் தெருவிலே வரக்கண்டால் நான் அழைக்கின்றேன் என்று அழைத்துவா" என்று அவளை வாசற்படியில் நிறுத்தித் தான் கட்டிலின்மேற் படுத்துக்கொண்டாள். நங்கவிச்சக்கரவர்த்தியார் விளக்குவைக்குந்துணையும் எதிர்ப்பார்த்திருந்து வாராமையின் "நாம் சொன்னதில் அரசனுக்குச் சிற்றமுண்டாயிற்றுப்போலும், எல்லா நாளைக்குத் தெரிந்து கொள்ளுதலாகும்" என்று பல்லக்கிலேறி வீட்டுக்குத் திரும்பினார். அங்ஙனம் அவர் திரும்பிவருகையில் பொன்னியின் தாதி அவரைக் கண்டு "அம்மாள் தங்களை அழைக்கின்றார்கள். தாங்கள் தயவுசெய்து உள்ளே வருதல்வேண்டும்" என, அவரும் உள்ளே சென்றார். ஆடை யவிழ்ந்துபோகவும், கூந்தல் முடி யவிழ்ந்து புரளவும் பஞ்சணையிற் படுத்துப் புரண்டுகொண்டிருந்த பொன்னி அவரைக் கண்டவுடன் எழுந்து ஓடிவந்து கட்டித்தழுவச் சென்றாள். சீதை என்னுந் திருமாதையன்றி வேறொரு மாதையுந் தொடாத விரதம் பூண்டிருந்த ஸ்ரீராமபிரானிடத்துப் பேரன்பு வாய்க்கப்பெற்ற நம்புலவர்பெருமான்

துணுக்குற்றுச் சற்று விலகிநின்று "நம் மன்னருக்குகந்த நன்னயமொழியிசை, மன்னுபுநல்லெழில் துன்னியபொன்னி யே! நில், நில், என்னைத் தொடாதை, சற்று விலகிநில்" என, அவள், "ஆ! ஈதென்ன! தங்களைப்போன்ற புருடர்களை நான் உலகிலிதுகாறுங் கண்டதேயில்லை. ஒழுகிய பெண் தானாகவே வந்து தழுவவந்தால் தடுக்கக்கூடியவர்கள் ஆண்மக்களில் தங் களையன்றி மற்றொருவ ரிருப்பார் என நான் நம்பவேயில்லை. ஏதோ புஸ்தகங்களில் அத்தகைய ஒழுக்க முடையவர்களா யிருந்தனரெனச் சிலரைப்பற்றி எழுதியிருப்பதைப் படித்த தன்றி அவ்விதமானவர்களை நான் இதுவரை கண்டதேயில்லை. இன்று தங்களைத் தான் புதுமையாகக் கண்டேன். நன்று, நன்று ! தாங்கள் தங்கள் புலன்களை யாளுந்திறம். பேதையா கிய என்னை வருத்தாமல் என் வேட்கையைத் தீர்த்து என்னை மகிழ்விக்கக் கோருகின்றேன்" என்றாள்.

நங்கவிச்சக்கரவர்த்தி "அறிவுடைய பாவாய்! நீ, என்னை அம்மான் என்று அழைக்கு நம்மன்னனுக்கு மனைவியாயிருத்த லால், எனக்கு மகளாகவேண்டும். ஆதலால், இதைவிட்டு வேறெதைச் சொன்னாலுந் தட்டாமற்செய்வேன்" என, ஆனால் "நீர் எனக்கு அடிமை என்று எழுதிக்கொடும்" என்றாள். அவர் அதற்குடன்பட்டு ஏடும் எழுத்தாணியுங் கொண்டுவரச் சொல்லித் "தாசிப்பொன்னிக்குக் கம்பரடிமை" என்று எழுதி, அதில் வருஷ மாச முதலியவற்றையுங் குறித்துச் சென் றார். பிறகு அவளந்தச் சாசனத்தை அரசனிடங் கொடுத் தாள். மறுதினம் நங்கவிச்சக்கரவர்த்தி சபைக்குவர, அரசன் அந்தச் சாசனத்தைத் தனக்கு வரும் ஏடுபடிப்பான் ஒருவன் கையிற் கொடுத்துப் படிப்பித்தான். சபையிலிருந்தோரனை வரும் அதைக்கேட்டு "இஃதென்ன அநியாயம்" என்று மனங் கலங்கிச் சரீரம் பதைபதைத்தார்கள். அரசன் குலுங்கக் குலு

ங்க நகைத்து நங்கவிச்சக்கரவர்த்தியை நோக்கி "நீர் தாசிப் பொன்னிக்கு அடிமைதானே" என, அவர் "அதற்கென்ன ஐயம்" என்றார். அரசன் மகாவித்துவானாகிய நீர் தாசிப்பொன்னிக்கு அடிமை என்பது உமக்கு வெட்கந் தருவதல்லவா? என, அவர் "அதன் கருத்தை நன்றாய் உணர்ந்தால் அஃது எவருக்குமே வெட்கந் தருவதாகாது" என்றார். அரசன் அஃதென்னென! அவர் "இதன் முதற்பதம் 'தா' என்பது. இது 'தாய்' என்பது கடைக்குறைந்து நின்றசொல். இரண்டாம் பதம் 'சி' என்பது. இது வடமொழியிலுள்ள ஸ்ரீ என்பதன் றிரிபாகிய 'சீ' என்பது குறுக்கல் விகாரம் பெற்று நின்றசொல். மூன்றாஞ்சொல் 'பொன்னி' என்பது. இது விகுதிபெற்ற பெண்பாற் பெயர்ச்சொல். நான்காஞ்சொல் 'கு' என்பது. இது நான்காம் வேற்றுமை யுருபிடைச்சொல். ஐந்தாம் பதம் 'கம்பர்' என்பது. ஆறாம்பதம் 'அடிமை' என்பது. தாய் - உலக மாதாவாகிய, சி - தன்னை யடைந்தார்க்குச் சகல செல்வங்களையும் பாலிப்பவளான, பொன்னிக்கு - ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு, கம்பர் அடிமை என்பது இதன் பொருள். இதில் வெட்கந் தோன்றுதற்கு நியாயமென்னுளது" என்றார். அரசன் அதைக் கேட்டு மிகவுஞ் சினங்கொண்டு,

"போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடின்
தூற்றினர் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினு மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே."

என்னுமொரு செய்யுளைப் பாடி நங்கவிச்சக்கரவர்த்தியை நோக்கி "நீர் இன்றுமுதல் என் தேசத்தி லிருக்கவேண்டாம்" என, அவர் அவ்வரசனாற் கொடுக்கப்பட்ட விருது முதலியவற்றையும் வாங்கி அவனெதிரிலேயே வைத்துவிட்டு அவனை நோக்கி,

"காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ - மேதினியிவ்
கொல்லிமலைத் தேன்சொரியுங் கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ வெங்கட் கிடம்." எனவும்,

"மன்னவனு நீயோ வளநாடு முன்னதோ
உன்னையறிந் தோதமிழை யோதினே - னென்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ வுண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு." எனவும்,

"அன்றையினும் வைய மகன்றதோ வல்லவென்று
குன்றெடுத்து நீதிருத்திக் கொண்டாயோ - வென்றும்
அடைந்தாரைக் காக்கு மகளங்கா துங்கா
நடந்தாயோ நாலா றடி." எனவும்

மூன்று வெண்பாக்களைப் பாடிப் பிறகு "உன்முன் உனக்குச் சமானமாகிய அரசன் எனக்கு அடைப்பைக்காரனாக இருக்கச் செய்கின்றேன்" என்று சபதஞ்செய்து அரசன் சமுகத்தைவிட்டுப் போய்விட்டார். அதைக்கண்டு அச்சபையோர் யாவரு மனக்கலக்க மெய்தி, அரசனுக்கஞ்சி ஒன்றும் பேசாமல் மௌனஞ் சாதித்தனர்.

நங்கவிச்சக்கரவர்த்தி வழியிற்போகையிற் பசி மிகுதியினால் ஒரு கோமூட்டிக்கடையிற் சென்று சிறிது அவல் கொடுக்கும்படி கேட்டார். "பொதிக் களக்கிறதற்குமுன்னே சத்தத்துக்கு அளக்கச் சொல்லுதல்போலக் கடை போணியாகாததற்குமுன்னே உனக்குக் கொடுக்கச் சொல்லுகிறாயோ, சரிதான், இல்லை போ" என்றான். மற்றுஞ் சிறிதுதூரஞ் சென்று செக்கான் எள்ளாடுவது கண்டு "அப்பா! கொஞ்சம் பிண்ணாக்குக் கொடு" என்றார். அவனும் அப்படியே கூறிவிட்டான். இன்னுஞ் சிறிதுதூரஞ் சென்று ஒரு பிராமணன் வீட்

டைக்கண்டு தண்ணீர் கேட்டார். அவன் "சூத்திரருக்கு வார்த்த தீர்த்தசேஷம் பிராமணருக்கு ஆகுமோ? போ, போ" என்றான். பின்னுஞ் சிறிதுதூரஞ் சென்று ஏருழும் வேளாளனொருவன் பழஞ்சோறு சாப்பிடப்போகையில் அவனிடஞ் சென்று கையேந்தினார். அவன் அப்பழஞ்சோற்றை அவருக்கிட்டுபசரித்தான். அவரதை யுண்டு மகிழ்ந்து,

"செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே - முட்டிபுகும்
பாப்பா ரகத்தை யெட்டிப் பாரோமே யெந்நாளுங்
காப்பாரே வேளாளர் காண்."

என்றொரு பாடலைப் பாடினார்.

பிறகு அவன் மிகுதியை யுண்டு ஏருழுகையிற் படைச்சாலின்கீழ்ப் பூமிக்குள் பொற்காசு நிறைந்த தவலையொன்று அவனுக்குக் கிடைத்தது. அவன் "இவரது வாக்கு விசேஷத்தாலேயே நமக்கு இத்திரவியங் கிடைத்தது" என்று தனக்குள் உன்னி அவரை வீட்டுக்கு அழைத்துச்சென் றுபசரித்து அத்திரவியத்திற்பாதி எடுத்துக்கொண்டு போகச்சொன்னான். அவர் அதைப் பெற்றுக்கொள்ளாமல் நந்நான்கு முழத்தில் இரண்டு துண்டு பெற்றுக்கொண்டு போய்விட்டார். போகையில் ஓர் ஊரிற் சிறந்த பணக்காரியாகிய வேலி என்பவள் மண்சுவர் ஒன்று கட்ட எண்ணி "யாரேனும் இச்சுவரைக் கட்டி முடித்தால் ஒரு குறுணி நெல் கொடுக்கின்றேன்" என்று விளம்பரஞ் செய்திருந்தாள். அதை யாரேனுஞ் சென்று கட்டினால் ஒரு பிரம்மராக்ஷசு கட்டி முடியும்வரையினும் இருந்து கட்டி முடிந்ததும் அதைத் தள்ளிவிடுவது வழக்கம். அதை யறியாத நம்புலவர்பெருமான் அங்குச் சென்று அதனைக் கட்டினார். கட்டி முடிந்ததும் அது விழுந்துவிட்டது. அவர் மீண்டு முயன்று அதனைக் கட்டி அது விழப்போகுந்தருணத்தில்,

"மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
சொற்கொண்ட பாவின் சுவையறிவா ரீங்கிலையே
விற்கொண்ட பிறைநுதலாள் வேலிதருங் கூலி
நெற்கொண்டு போமளவு நில்லாய் நெடுஞ்சுவரே."

என்று ஒரு செய்யுளைப் பாடினர்.

அதைத் தள்ளும் பிரம்மராக்ஷசு அதைத் தள்ளாமல் அவரை வணங்கிவிட்டுப் போய்விட்டது. பிறகு அவர் வேலியிடஞ் சென்று அவள் கொடுப்பதாகச் சொன்ன குறுணி நெல்லைப் பெற்றுக்கொண்டு போய்விட்டார். பிறகு சில தினங்களிற் சோநாட்டை யடைந்தார்.

## ஏழாம் அத்தியாயம்.

சோநாட்டையடைந்து ஒருபிரபுவைக் கண்டு "நான் கம்பரிடம் அடைப்பைக்காரனாக இருந்தவன். அவர் அரசனிட மனஸ்தாபங்கொண்டு எங்கேயோ போய்விட்டனர். ஆகையால், இங்கு வந்தேன்" என்றார். அப்பிரபு அவரை அரசனிடம் அழைத்துக்கொண்டுபோய்விட்டு அவர் கூறியபடி அவர் வரலாற்றை அரசனுக்குச் சொன்னன். அதைக்கேட்டு அரசன் அவரைத் தன்னிடம் அடைப்பைக்காரனாக வைத்துக்கொண்டான். ஒருநாள் அவ்வரசன் சமுகத்து வித்துவான்கள் ஒவ்வொருவராகக் கம்பராமாயணத்திலிருந்து சிற்சில செய்யுட்களைச் சொல்லிப் பிரசங்கித்தலைக் கேட்டு அச்சபையி லிருந்தோர் சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தனர். அடைப்பைக்காரனாக இருக்கும் இவர் மாத்திரம் சிலசமயங்களிற் சந்தோஷிக்கிறதும், சிலசமயங்களில் வருந்துவதுமாக இருந்தார். அனைவரையுங் கவனித்துக்கொண்டிருந்த அரசன் பிரசங்க முடிந்த பிறகு இவரைத் தனியாக அழைத்து "நம் புலவர்களது பிரசங்கத்தைக் கேட்டுச் சபையிலிருந்தோர் யாவரு முற்றுஞ் சந்தோஷிக்க நீமாத்திரம் சிலதருணங்களிற் சந்தோஷித்தும்,

சில தருணங்களில் வருந்திக்கொண்டு மிருந்தனையே, அதற்குக் காரணம் யாது?" என, அவர் "வேந்தே! நான் கம்பரிடம் அடைப்பைக்காரனா யிருக்கையில் அவர் பலமுறையும் பிரசங்கிக்கக் கேட்டிருக்கின்றேன். இவர்கள் கூறும் பொருள்கள் சில இடங்களில் அவர் கருத்துக்கிணங்கியும் சில இடங்களில் இணங்காமலும் இருக்கின்றன. அங்ஙனமிருத்தலே என் சந்தோஷத்தையும், வருத்தத்தையுங் கொண்டதற்குக் காரணம்" என்றனர். அரசன் அங்ஙனமானால் "நீ கம்பர் கருத்துக்கிணங்கப் பிரசங்கிப்பாயோ?" என, "நான் அவரிடம் நேரிற் கேட்டிருந்தவனாதலாற் கூடியவரையிற் பிரசங்கிப்பேன்" என்றார். அரசன் அவ்விதமே மறுநாள் யாவருஞ் வந்தபிறகு அவரைப் பிரசங்கிக்கச் சொன்னான். அவர் அங்கிருந்தோர் அனைவரும் ஆச்சரியமும் ஆநந்தமு மெய்திச் சிரக்கம்பனம் பண்ணும்படி பிரசங்கித்தனர். அரசன் அதன்பிறகு அவரை மற்றைய புலவர்களுக்குத் தலைவராக்கி அவரைத் தன்னுடன் சமமாக வைத்துக்கொண்டு சாப்பிடுவானாயினன். அதனைக் கண்டு அவ்வரசன் சமுகத்துப் புலவர்கள் நங்கவிச்சக்கரவர்த்தியிடம் மிக்க பொறாமைகொண்டு, அரசனுக்கு க்ஷவரஞ்செய்யும் அம்பட்டனை அழைத்து, "நீ எப்படியேனும் இந்த அடைப்பைக்காரனை உங்கள் இனத்தானென்று காட்டிக்கொள். உனக்கு நாலாயிரம் வராகன் தருகின்றோம்" என்று இரண்டாயிரம் வராகன் கையிற் கொடுத்தார்கள். அவன் பணத்தாசையால் அதற்கிணங்கி, ஒருநாள் நங்கவிச்சக்கரவர்த்தி ராஜசபையினின்றும் வருகையில் யாவரும் பார்க்கும்படி "அண்ணா! இதுவரையினும் எங்குப் போயிருந்தீர்கள்?" என அவரைக் கட்டிக்கொண்டு கோவென்றழுதான். அவரும் இது புலவர்களின் சூழ்ச்சி என்றுணர்ந்து தாமும் அவனைக் கட்டியழுது, அவனது வீட்டுக்கு அழைத்துச் சென்று, அவனை நோக்கித் "தம்பி நீ இதுகாறும் சம்பாதித்ததில் எனக்குப் பங்கு கொடுக்கவேண்டும்" என,

அவன் "அண்ணு! நாலாயிரம் வராகன்தான் சம்பாதித்தேன்" என்று புலவர்கள் கொடுத்த இரண்டாயிரம் வராகனை அவர்முன் வைத்தான். அவர் அவ்வராகனை எடுத்துக்கொண்டு "தம்பீ! இதுகாறும் நீ அரசனுக்குச் சவாஞ் செய்து சம்பாதித்தபடி நான் சம்பாதிக்கவேண்டும்" என, "அப்படியே செய்யுங்கள்" என்றுன். அவர் "இப்படி நீ மன்னனிடஞ் சொல்லிவிடவேண்டும்" என்று அவனை ராஜசபைக்கு அழைத்துச் சென்று தாங்கள் பாகந் தீர்த்துக்கொண்ட சமாசாரத்தைக் கூறிப் பிறகு சாஸ்வதியை மனதில் நினைத்தார். உடனே சாஸ்வதியின் காற்சிலம்பு அவர்கையில் வந்து இருந்தது. அவர் அதை அரசனுக்குக் காட்டிக் "கோமானே! இக்காற்சிலம்பின் ஜதையாகிய மற்ருெரு சிலம்பு என் தம்பியிடம் இருக்கின்றது. அதையும் இதையுந் தாங்கள் பெற்றுக்கொண்டால் தங்கள் பட்டமகிஷிக்கு உதவும்" என்ருர். அவன் "இதேது கிணறுவெட்டப் பூதம்புறப்பட்டாற்போ லிருக்கின்றதே. இனி பொய் சொன்னுல் நமது சிரம்போய்விடும்" என்று உண்மையைச் சொல்லிவிட்டான். அரசன் அதைக்கேட்டு ஆச்சரியமெய்தி, நங்கவிச்சக்கரவர்த்தியை நோக்கி, "இக்காற்சிலம்பு உமக்கு வந்தவிதத்தைக் கூறவேண்டும்" என, அவர் சாஸ்வதியைக் கருதினர். உடனே அத்தேவி அந்தரத்தில் தோன்றிக் "கம்பநாடனே! சிலம்பைத் தருக" என, அவர் அச்சிலம்பை நீட்டினர். அதைப் பெற்றுக்கொண்டு அத்தேவி மறைந்துவிட்டனள். அரசன் அதனுல் அவரைக் கம்பநாடர் என்றறிந்து அன்புடன் கட்டித்தழுவி, அறியாமையினுல் தன்னிடம் அவரை அடைப்பைக்காரனுக வைத்துக்கொண்டதைப்பற்றி வருந்தினன். நங்கவிச்சக்கரவர்த்தி அரசனுக்குத் தேறுதல் கூறிப் பிறகு தாம் சோழனைவிட்டு நீங்கி வந்ததையும் வருகையில்செய்த சபதத்தையுங் கூறினர். அரசன் "அவ்வாறே தங்களுக்கு வேண்டியபோது யான் செய்கின்றேன்"

என்றனன். பிறகு அரசன் அவருக்குத் தன்னினு மேன்மை யான சிறப்புச்செய்து வந்தனன். இங்ஙனம் இருக்க, ஒருநாள் இரவு நங்கவிச்சக்கரவர்த்தி அரசனது சால்வையைப் போர்த் துக்கொண்டு ஒரு பஞ்சணையிற் படுத்திருக்க, அரசன் மனைவி தன் நாயகனென்றெண்ணி அவர் பக்கத்திற் படுத்துக்கொண்ட னள். அவர் கண்விழித்துக்கொண்டு பக்கத்தில் அரசன் மனைவி படுத்திருத்தலைக் கண்டு திடுக்கென எழுந்து அஞ்சிநிற்ப, அர சன் அதனை யுணர்ந்துவந்து அவருக்குச் சமாதான மொழி சொல்ல, அவர்,

"தேரையார் செவ்விள நீருண்ணப் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவார் நாவரை நத்தாமை
கோரைவாய்ப் பெண்சொரியுங் கொல்லிமலை நன்னாடா
ஊரை வாய்மூட வுலைமூடி தானிலையே."

என்னும் பாடலைப் பாடினர்.

அரசன் அதைக்கேட்டு ஆநந்தமடைந்து அவருக்கு உப சாரமொழிகளைக் கூறினன்.

இங்ஙனமிருக்கையில் ராஜேந்திரச்சோழன் நங்கவிச்சக் கரவர்த்தி சோழநாட்டைவிட்டுவந்தபிறகு அவரது பிரிவுக்குச் சகியாமல் வருந்தி அவரிருக்கும் இடத்தை யறிந்துவரும்படி பலரை யனுப்பினன். அவர்களிற் சிலர் அவர் சேரநாட்டிலிருப் பதை யறிந்துகொண்டுபோய்த் தெரிவிக்க, உடனே சேரனுக்கு ஒருகடிதமும், நங்கவிச்சக்கரவர்த்திக்கு ஒருகடிதமும் எழுதி யனுப்பினன். சேரன் அக்கடிதங்களைக் கண்டு நங்கவிச்சக்கர வர்த்தி தன்னைவிட்டுப் பிரிய நேர்ந்ததைப்பற்றி மிகவும் வருந் தினன். அவர் அவனுக்கு வேண்டிய சமாதானங்களைக் கூறிப் புறப்பட, அவ்வரசன் ராஜசமானமான சன்மானங்களைச் செ ய்து தானுஞ் சிறிது உடன்வந்து வழிவிட்டுச் சென்றனன். அவருஞ் சில தினங்களிற் சோழநாட்டை யடைந்தனர்.

## எட்டாம் அத்தியாயம்.

ராஜேந்திரன் நங்கவிச் சக்கரவர்த்தியாரது வருகையை யறிந்து சகலவிதமான மரியாதையோடும் எழுடி எதிர்சென்று அழைப்ப, அவர்,

"படுபருந்துஞ் சூர்ப்பேயும் பன்மிருகஞ் செந்நாய்
கொடிகழுகு மித்தனையுங் கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்."

என்றொரு வெண்பாவைப் பாடி அரசனை மகிழ்வித்தனர். அரசனும் அவரை அழைத்துச் சென்று சபையில் ஒருயர்ந்த ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து, "கவிசார்வபௌமரே! தங்களைக் காணாத இச்சபை இதுகாறுஞ் சூரியனைக் காணாத தாமரைத் தடாகம்போலப் பொலிவுகுன்றி இருந்தது. இப்போதுதான் பொலிவுற்றது" என, நங்கவிச்சக்கரவர்த்தி அரசனுக்குப் பல இன்மொழிகளைக் கூறி மகிழ்வித்தனர்.

சிலதினங்கள் சென்றபின் ராஜேந்திரன் நங்கவிச்சக்கரவர்த்தியை நோக்கி "அம்மானே! தாங்கள் என்னைவிட்டுச் செல்கையிற் செய்த சபதத்தை மறந்துவிட்டீர்கள் போலும்" என, அவர், "இல்லை, இல்லை, இன்று பதினைந்தாநாள் அச்சபதம் நிறைவேறும்" என்றுரைத்து, அச்செய்தியை அந்தரங்கனான ஒரு பணியாளன் மூலமாகச் சேரராஜனுக்குத் தெரிவித்தனர். அவ்வரசனும் உடனே மெய்க்காவலரை மாத்திரம் உடன்கொண்டு, தனது பட்டத்துக் குதிரையின்மேலேறிக் கொண்டுவந்து, அவ்வாறே ராஜேந்திரன் சபையில் நங்கவிச்சக்கரவர்த்தியின் பக்கத்தில் அடைப்பைக்காரனாக நின்று அவருக்குத் தாம்பூல மடித்துக்கொடுத்துக்கொண்டிருந்தான். நங்கவி

ஞர்பெருமான் அவ்வாசன் கொடுத்த வெற்றிலைச் சுருள்களைத் தாந் தரித்துக்கொள்ளாமல் விரல்களின் சந்தில் அடக்கி வைத்துக்கொண்டனர். அச்சமயத்தில் அங்கொருபுறமறைவி லிருந்தவளான ராஜேந்திரன் மகள் அடைப்பைக்காரனா யிருப்பவன் சோரனென்றுணர்ந்து குறிப்பாக அதனைத் தன் தந்தைக்குத் தெரிவித்தனள். அதனை யுணர்ந்து நங்கவிஞர்பெருமான் உடனே சோனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டனர். அவன் உடனே சபையினின்றும் வெளிப்போந்து தன் பரிமீது இவர்ந்து சென்று தன்னூட்டை யடைந்தனன். சோரன் சென்றபிறகு ராஜேந்திரன் நங்கவிஞர்பெருமானை நோக்கி, "அம்மானே! சோரனை ஏன் அனுப்பிவிட்டீர்?" என, அவர் "உன்னோடு ஒத்த அவ்வாசன் தனித்து வந்திருக்கையில் அவனை இன்னானென்றறியின் நீ பிடித்துச் சிறைப்படுத்திவிடுவாய் என்றெண்ணி அனுப்பிவிட்டேன்" என்றார். ராஜேந்திரன், "அப்படியா! நல்லது, அவன் உமக்கு மடித்துக் கொடுத்த வெற்றிலைச்சுருளை நீர் தரித்துக்கொள்ளாமல் விரற்சந்தில் அடுக்கிவைத்துக் கொண்டதென்னை?" என, அவர், "அற்பனுக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத்திரியிற் குடைபிடிப்பான்" என்பதுபோல் ராஜேஸ்வரனாகிய அவ்வாசன் என்னை மேன்மைப்படுத்தும்பொருட்டு அங்ஙனஞ் செய்தால் யான் அதை அறியாமல் அவ்வெற்றிலைச் சுருள்களைத் தரித்துக்கொள்வது தகுதியாமா?" என்றனர். ராஜேந்திரன் அதைக்கேட்டு அவாது நன்றியுடைமையையும், பெருந்தகைமையையு மிகவுங் கொண்டாடினன்.

ஒருநாள் இரவில் ராஜேந்திரன் நகர்சோதனையின்பொருட்டுப் போகையில் காளி கோயிலில் ஒருவன் அரைக்குஞ் சந்தனம் வழிப அதனை ஒருபேய் தொட்டது. சந்தனம் அரைப்பவன் ஒரு கூன் கத்தியால் அப்பேயின் கையை வெட்டினன். அதனைக் கண்ட அரசன் அப்பொழுதே நங்கவிநாதரால் அத

னைக் கண்டசுத்தியாகப் பாடுவிக்க வெண்ணி அவர் மனைக்குச் சென்று கதவைத் தட்டினன். அச்சமயம் நடையிற் படுத்திருந்த அம்பிகாபதி எழுந்து,

"கரைக்கு வடக்கிருக்குங் காளிகா எம்மைக்
கரைத்து வழிசாந்தைத் தொட்டப்பேய்"

என்று இரண்டடிகளைப் பாடினன். அதற்குள் நங்கவிநாதர் அதனை யுணர்ந்து அங்குவந்து

-உரைத்து
மறைக்க வறியாத வன்பேயின் கையைக்
குறைக்குமாங் கூன்கத்தி கொண்டு."

என்று தனிச் சீரையு மற்றிரண்டடிகளையும் பாடிக் கதவைத் திறந்துகொண்டு வெளியில்வந்து அரசனை உபசரித்தனர்.

அரசன் மிகவுங் களித்துச் சென்றனன். மற்றொருநாள் கலியாணமாகாத ஒரு பெண் விபசரித்துக் காட்டிலுள்ள ஒரு கள்ளிப்புதரின்கீழ் ஒரு புதல்வனை யீன்றாள். அதனை யறிந்த அவளது முதியோர் அவளைக்கொன்று ஆற்றிலே மிதக்கவிட்டார்கள். அதுகண்டு காக்கையும், கழுகும் அவளைக் கொத்திக்கொண்டிருந்தன. அப்போது நீரினால் அசைக்கப் பட்டுக்கொண்டிருந்த அவளது கைகள் அக் காக்கையையும், கழுகையும் ஓட்டுவனபோற் றோன்றின. அதனைக் கண்ட ராஜேந்திரன் தன் சபைக்குவந்து நங்கவிச்சக்கரவர்த்தியை நோக்கிக் "காக்கைகழுகோட்டுங்கை" எனச் சமிக்கை கொடுத்துத் தன் கருத்திலுள்ளதைக் கண்டசுத்தியாக அமைத்துப் பாடச்சொன்னன். அவர் உடனே,

"கண்டாயோ பார்வேந்தா கானகத்துக் கள்ளியின்கீழ்
வெண்டாழை பூத்து விளக்கெரியப்—பெண்டாலி

பூட்டுதற்கு முன்னமொரு புத்திரனைப் பெற்றெடுத்தாள்
காக்கை கழுகோட்டுங் கை."

என்று பாடி முடித்தனர்.

அரசன் மகளை அம்பிகாபதி களவிற் புணர்ந்தானாக அதனை அரசன் அறிந்து அவனை வெட்டுவித்தனன். அப்போது நங்கவிச்சக்கரவர்த்தி மிகவும் வருந்தி,

"மட்டுப்படாக் கொங்கை மானார்கலவி மயக்கத்திலே
கட்டுப்பட்டா யென்னகாதல் பெற்றாய்மதன் கையம்பினால்
பட்டுப்பட்டாயினுந் தேறுவையே யென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய் மகனே தலைநாளின் விதிப்படியே." எனவும்,

"பாப்போத ஞாலமொரு தம்பியாளப் பனிமதியந்
தூப்போ னொருதம்பி பின்வரத்தானுந் துணைவியுடன்
வாப்போன மைந்தற்குத் தாதைபொறாதுயிர் மாய்ந்தனனெஞ்
சுரப்போ வெனக்கிங் கினியாருவமை யுரைப்பதற்கே." எனவும்

பாடிப் புலம்பினர். பிறகு நங்கவிச்சக்கரவர்த்தி எங்குஞ் செல்லுதலின்றி மனையிலேயே யிருந்தனர். இங்ஙனஞ் சில தினங்கள் செல்ல, ஒருநாள் ராஜேந்திரனுடைய புத்திரன் யானையினால் துரத்தப்பட்டு நங்கவிச்சக்கரவர்த்தியின் வீட்டிற் புகுந்துகொண்டனன். புத்திரசோக மிகுதியினால் புத்தி மயங்கியிருந்த அவர் "காட்டுயானை விட்டாலுங் கவியானை விடாது" என்றுரைத்துத் தமது கையிலிருந்த எழுத்தாணியினாற் குத்தி அவனைக் கொன்றுவிட்டனர். அதனைக் கேள்வியுற்ற ராஜேந்திரன் விரைந்துவந்து அவர்மீது அம்பெய்தனன். அவர் அந்த அம்பைக் கையிற் பற்றிக்கொண்டு,

"வில்லம்பு சொல்லம்பு மேதினியில் ரெண்டுண்டு
வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம்—வில்லம்பு
பட்டதடா வென்மார்பிற் பார்வேந்தா நின்குலத்தைச்
சுட்டதடா வென்வாயிற் சொல்."

என்று ஒரு வெண்பாவைப் பாடி அவன் குலமே நாசமாகும்படி சபித்தனர். பிறகு "புராதன மறையும் அண்டர்பொற் பதமும் பொன்றுநா ளதனினும் பொன்று, அராவணை யமலனுலகெனும் பரமபதத்தினை" யடைந்தனராக, அவரது திருமேனியைப் பாண்டியநாட்டில் நாட்டரசங்கோட்டையிற் றிருப்பள்ளிப் படுத்தினரென்ப.



சரஸ்வதியந்தாதியின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| அ | |
| அடிவேதநாறுஞ் | 37 |
| அடையாள | 40 |
| அருக்கோதய | 13 |
| ஆ | |
| ஆயகலைக | 2 |
| இ | |
| இயலானது | 11 |
| இலங்குந்திரு | 45 |
| இனிநானுணர்வ | 18 |
| உ | |
| உரைப்பா | 9 |
| ஒ | |
| ஒருத்தியை | 24 |
| க | |
| கமலந்தனி | 34 |
| கரியாரளகமுங் | 46 |
| கருந்தாமரை | 32 |
| கா | |
| காரணன்பாக | 36 |
| ச | |
| சரோருகமே | 30 |
| சீ | |
| சீர்தந்த | 6 |
| சே | |
| சேதிக்கலாங் | 39 |
| த | |
| தனக்கேதுணி | 34 |
| தே | |
| தேவரும்தெய்வ | 27 |
| தொ | |
| தொழுவார்வலம் | 42 |
| நா | |
| நாயகமான | 29 |
| ப | |
| படிகநிறமும் | 4 |
| பா | |
| பாதாம்புய | 16 |
| பாவுந்தொடை | 19 |
| பு | |
| புந்தியிற் | 22 |
| புரிகின்ற | 28 |
| பெ | |
| பெருந்திருவுஞ் | 47 |
| பொ | |
| பொருளாலிரண் | 44 |
| ம | |
| மயிலேமடப்பிடி | 15 |
| வ | |
| வணங்குஞ்சிலை | 7 |
| வே | |
| வேதமும் | 29 |
| வேறிலையென்று | 38 |
| வை | |
| வைக்கும்பொருளு | 42 |


செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

ஸ்ரீ

# சரஸ்வதியந்தாதி

## மூலமும் உரையும்.

இஃது இரண்டுசொல் ஒரு சந்தியினாலான சொற்றொடர். இது விரியுங்கால் சரஸ்வதியினது அந்தாதி என விரியும். இது செய்யுட் கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். செய்யுட்கிழமைப் பொருள் சடகோபர் அந்தாதி என்பதிற்போல நூலிற் கூறப்படும் விஷயமாகும் உரிமையுடையதாதலும், கபிலாகவல் என்பதிற்போல நூலியற்றுங் கருத்தாவாகு முரிமையுடையதாதலும் என இருவகைப்படும் அவற்றுள், சரஸ்வதியந்தாதி என்பது நூலிற் சொல்லப்படும் விஷயமாயிருக்கு முரிமையுடைய செய்யுட் கிழமை யென்க. இத்தொடரிலுள்ள சொற்களிரண்டும் வடசொற்கள். அவற்றுள், சரஸ்வதி என்பது சரஸ்+வதி என்று பிரிக்கப்படும்; இதன் பொருள் எங்கு முள்ளவளென்பது. அந்தாதி என்பது அந்தம்+ஆதி எனப் பிரிக்கப்படும்; இதன் பொருள் அந்தத்தை ஆதியாகவுடையது என்பது. அதாவது ஓரடியின் அல்லது ஒரு செய்யுளின் ஈறு அதை அடுத்த அடியின் அல்லது செய்யுளின் முதலாக வருவது. அஃது எழுத்து அந்தாதியாக வருதலும், அசை அந்தாதியாக வருதலும், சீர் அந்தாதியாக வருதலும், அடி அந்தாதியாக வருதலும் என நான்கு வகைப்படும்.

"அறிவுசே ருள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்த ரீதென."

இதின் முதலடியின் ஈற்றெழுத்தாகிய நு என்பது இரண்டாமடியின் முதலெழுத்தாக வந்தமை யறிக.

"உலகுடன் விளக்கு மொளிதிக ழவிர்மதி
மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை."

இதின் முதலடியின் ஈற்று மதி என்னு நிரையசை அடுத்த அடியின் முதலசையாக வந்தமை யறிக.

"மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை யாசனம்."

இதின் முதலடியின் ஈற்றுச்சீராகிய முக்குடை என்பது அடுத்த அடியின் முதற்சீராக வந்தமை யறிக.

"ஆசனத் திருந்த திருந்தொளி யறிவன்
ஆசனத் திருந்த திருந்தொளி யறிவனே."

இதின் முதலடியாகிய "ஆசனத் திருந்த திருந்தொளி யறிவன்" என்பது அடுத்த அடியாக வந்தமை யறிக. அடுத்த அடியின் ஈற்று ஏகாரம் ஒன்றுமே முதலடியி லில்லாதது. இவை அடிகளில் நான்கந்தாதிகளும் வந்ததற்கு உதாரணம். இங்ஙனமே செய்யுளினும் வருதல் காண்க.

காப்பு.

இது விகுதிபெற்ற தொழிற்பெயர். கா - பகுதி, ப் - சந்தி, பு - தொழிற்பெயர் விகுதி. இதற்குக் காத்தல் என்பது பொருள்; இது தொழிலாகுபெயராய் இந்நூலிடையூறின்றி யினிது முடிதற்பொருட்டுக் காப்பாகச் செய்யப்படுங் கடவுள் வணக்கச்செய்யுளை யுணர்த்திற்று.

நேரிசை வெண்பா.

ஆய கலைக ளறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்கு மென்னம்மை - தூய

உருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

(இதன் பொருள்.) ஆய - தோன்றிய, கலைகள் அறுபத்துநான் கினையும் - அறுபத்துநான்குவகை வித்தைகளையும், ஏய - செம்மையாக, உணர்விக்கும் - (தன்னடியார்களுக்குத்) தெரிவிப்பவளும், உரு - திருமேனி, தூய பளிங்கு போல்வாள் - மாசற்ற பளிங்குக்கல்லைப் போன்றவளுமாகிய, என் அம்மை - என் தாயாகிய சரஸ்வதிதேவி, என் உள்ளத்தினுள் - என்னுடைய மனதில், இருப்பள் - இன்றுபோலவே என்றும் இருப்பாள் (ஆகையால்), இங்கு - என்னிடம், இடர் வாராது - துன்பமணுகாது, என்றவாறு.

கலைகள் அறுபத்துநான்கினையும் என்பதனை அறுபத்துநான்கு கலைகளையு மெனமாற்றுக. உணர்விக்கும் அம்மையென இயைக்க. இருப்பள் என்பதில் பகரமெய் எதிர்காலத்தை யுணர்த்தாமல் முக்காலத்தினு மொன்றுந்தன்மைப் பொருளை யுணர்த்தியது. இங்கு என்பது ஈண்டுத் தன்மையிடத்தை யுணர்த்தியது.

அறுபத்துநான்கு கலைகளாவன.

1 அக்ஷர இலக்கணம்.
2 லிகிதம்.
3 கணிதம்.
4 வேதம்.
5 புராணம்.
6 வியாகரணம்.
7 நீதிசாஸ்திரம்.
8 சோதிடசாஸ்திரம்.
9 தருமசாஸ்திரம்.
10 யோகசாஸ்திரம்.
11 மந்திரசாஸ்திரம்.
12 சகுனசாஸ்திரம்.
13 சிற்பசாஸ்திரம்.
14 வைத்தியசாஸ்திரம்.
15 உருவசாஸ்திரம்.
16 இதிகாசம்.
17 காவியம்.
18 அலங்காரம்.
19 மதுரபாடனம்.
20 நாடகம்.
21 நிருத்தம்.
22 சத்தப்பிரமம்.

23 வீணை.
24 வேணு.
25 மிருதங்கம்.
26 தாளம்.
27 அஸ்திரபரீக்ஷை.
28 கனகபரீக்ஷை.
29 ரதபரீக்ஷை.
30 கஜபரீக்ஷை.
31 அசுவபரீக்ஷை.
32 ரத்தினபரீக்ஷை.
33 பூமிபரீக்ஷை.
34 சங்கிராமவிலக்கணம்.
35 மல்யுத்தம்.
36 ஆகருடணம்.
37 உச்சாடனம்.
38 வித்துவேடணம்.
39 மதனசாஸ்திரம்.
40 மோகனம்.
41 வசீகரணம்.
42 இரசவாதம்.
43 காந்தருவவாதம்.
44 பைபீலவாதம்.
45 கவுத்துவவாதம்.
46 தாதுவாதம்.
47 காருடம்.
48 நட்டம்.
49 முட்டி.
50 ஆகாயப்பிரவேசம்.
51 ஆகாயகமனம்.
52 பரகாயப்பிரவேசம்.
53 அதிரிசயம்.
54 இந்திரசாலம்.
55 மகேந்திரசாலம்.
56 அக்கினிஸ்தம்பம்.
57 ஜலஸ்தம்பம்.
58 வாயுஸ்தம்பம்.
59 திட்டிஸ்தம்பம்.
60 வாக்குஸ்தம்பம்.
61 சுக்கிலஸ்தம்பம்.
62 கனனஸ்தம்பம்.
63 கட்கஸ்தம்பம்.
64 அவத்தைப்பிரயோகம். (க)

படிக நிறமும் பவளச்செவ் வாயுங்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையுந்—துடியிடையும்
அல்லும் பகலு மனவாத முந்தித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

(இ-ள்.) படிகநிறமும் - (சரஸ்வதி தேவியினுடைய) படிகம் போன்ற வெண்ணிறத்தையும், பவளச்செவ்வாயும் - பவழம்போன்ற செவந்தவாயையும், கடி கமழ் பூ தாமரைபோல் கையும் - வாசனை பரவு

கின்ற அழகிய தாமரைப்பூவைப்போன்ற கைகளையும், துடி இடையும்- உடுக்கையைப்போன்ற இடையையும், அல்லும்பகலும் - இரவும்பகலுமாக, அனவரதமும் - எந்நாளினும், துதித்தால்-வாழ்த்தினால், கல்லும் கவி சொல்லாதோ - (அறிவில்லாத) கல்லுங் கவிபாடும், எ-று.

சரஸ்வதி தேவியைத் துதிப்பவர் மந்தமிதியினராயினுங் கவி பாடும் வன்மை பெறுவர் என்பது இதன் கருத்து. வாழ்த்துதல், வணங்குதல், பொருளியல்புரைத்தல் என்னு மங்கள மூன்றனுள் இவ் விரு செய்யுளும் பொருளியல்புரைத்தலின்பாலவா மென்க. என்னெனின், முதற்செய்யுளிற் சரஸ்வதிதேவி தன்னைத் தியானிப்பார்தம் மனத்திருந்து அவர்களுக்கு இடையூறுவாராமற் காப்பளெனவும், இவ் விரண்டாஞ் செய்யுளில் தன்னைத் துதிப்பவர் மந்தமதியினராயினும் அவர்களுக்குக் கவிபாடும் வன்மையை யளிப்பள் எனவுங் கூறினமை யின் என்பது.

படிகநிறம், பவளச்செவ்வாய், தாமரைபோற்கை, துடியிடை என் பனவற்றுண் முதன்மூன்றும் உருவுவமை; நான்காவது மெய்புவமை; இவற்றுள் இரண்டாவது விரியுவமை; மற்றைய மூன்றுந் தொகை யுவமை. விரியுவமையாவது பொதுத்தன்மை விரிந்துநிற்கப்பெறுவது; தொகையுவமையாவது பொதுத்தன்மை தொக்குநிற்கப்பெறுவது.

இவற்றுள் மூன்றாவதொழிய மற்றைய மூன்றுந் தொடர்மொழி வகையில் உவமைத்தொகைநிலைத்தொட ரென்க. படிகம், பவளம் என்பன தற்பவ வடசொற்கள். கடி என்பது பலபொருளொரு மொழியாகிய உரிச்சொல்; அஃது ஈண்டு மணம் என்னும் பொருள் தந்துநின்றது. துதித்தால் என்பது எதிர்கால வினையெச்சம்; இதில் துதி-பகுதி, த்-சந்தி, து-சாரியை, இதில் உகரங் கெட்டதுஞ் சந்தி, ஆல் - வினையெச்சவிகுதி. கல்லும் என்பதில் உம்மை இழிவு சிறப்புப் பொருளது. சொல்லாதோ என்பதில் ஓ தெரிநிலைப் பொருளது. (உ)

---

## நூல்.

### கட்டளைக் கலித்துறை.

சீர்தந்த வெள்ளிதழ்ப் பூங்கம லாசனத் தேவிசெஞ்சொற்
றார்தந்த வென்மனத் தாமரை யாட்டி சரோருகமேற்
பார்தந்த நாத னிசைதந்த வாரணப் பங்கயத்தாள்
வார்தந்த சோதியம் போருகத் தாளை வணங்குதுமே.

(இ-ள்.) சீர் தந்த - சிறப்புப்பொருந்திய, வெள் இதழ் - வெண்மையாகிய இதழ்களையுடைய, பூ - அழகாகிய, கமலாசனம் - தாமரையாகிய ஆசனத்தில் வீற்றிருக்கும், தேவி - தலைவியும், செம் சொல் - செம்மையாகிய சொற்களாலாகிய, தார்-மாலையை, தந்த - (புனைந்து) கொடுத்த, என் மனம் - எனது மனமாகிய, தாமரை ஆட்டி - தாமரையைத் தனக்குரியதாகக் கொண்டிருப்பவளும், சரோருகமேல் - (நாரத்தி லறி துயில்கொண்டருளிய பகவானது உந்தியிற் றோன்றிய) தாமரையினது மேலிடத்திலிருந்து, பார் தந்த-பூமியைச் சிருஷ்டித்த, நாதன் - இறைவனாகிய பிரம்மதேவன், இசைதந்த-சொல்லியருளிய, ஆரணம் - வேதமாகிய, பங்கயத்தாள் - தாமரையில் வீற்றிருப்பவளுமாகிய சரஸ்வதிதேவியின், வார்தந்த - மிகுந்த, சோதி - ஒளியினையுடைய, அம்போருகம் - தாமரையையொத்த, தாளை - திருவடிகளை, வணங்குதும் - (நாம்) வணங்குவோம், எ-று.

சீர் தந்த என்பதில் தந்த என்பதற்குப் பொருந்திய என்பதுபொருள். ஆட்டி-ஆளுதலையுடையவள்; ஆள்-பகுதி, ளகரமெய் டகரமெய்யானது சந்தி, து - சாரியை, அதில் உகரங்கெட்டது சந்தி, தகரமெய் டகரமெய்யானதுஞ் சந்தி, இ-வினைமுதற்பொருண்மை விகுதி; இதற்கு ஆண்பால் ஆளன் என்பது. வார்தந்த என்பதில் வார்தா - பகுதி, இதில் தகரங் குறுகியது குறுக்கல் விகாரம், த் - சந்தி, அது ந் - ஆனது மெலித்தல், த் - இறந்தகால இடைநிலை, அ - பெயரெச்ச

விகுதி. பிரம்மதேவர் எல்லாவுயிர்களையும் படைத்தவராதலின் நாதன் என்றார்.

கமலம், ஆசனம், சரோருகம், ஆரணம், பங்கயம், சோதி, அம்போருகம் என்னும் இவை வடசொற்கள். "ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்" என்றபடி சரஸ்வதி என்னும் ஒரு பொருண்மேல் தேவி, தாமரையாட்டி, பங்கயத்தாள் என்னும் பலபெயர்கள் வந்தன. நாம் - தோன்றா எழுவாய். வணங்குதும் - தன்மைப் பன்மை வினைமுற்று, வணங்கு-பகுதி, தும்-தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி. நாம் தாளை வணங்குதும் என வினைமுடிக்க.

பிரம்மதேவர் சரோருகமேற் பார்த்தந்த வரலாறு:—ஆதியில் பகவானானவர் உலகங்களைப் படைக்க எண்ணித் தமது உந்தியில் தாமரையைத் தோற்றுவித்து அதில் பிரம்மதேவரை யுண்டாக்கினார். அவர் தோன்றி "நாமுன் எங்கிருந்தோம், இப்பொழுது எங்கு வந்திருக்கின்றோம்" என்றெண்ணி நான்கு திக்கையுஞ் சுற்றிப்பார்த்தனர். அங்ஙன நான்கு திக்கையும் பார்த்தலால் அவர்க்கு நான்குமுகங்க ளுண்டாயின. ஆனால் அவருக்குத் தாம் இருக்குஞ் செந்தாமரையை யன்றி வேறொன்றுங் காணப்பட்டிலது. பிறகு அவர் தாமிருக்குந் தாமரையின் நாளத்தின் துளையின் வழியாகச் சென்று தேவவருஷத்தில் ஆயிரம் வருஷந்தேடினர். அங்ஙனந் தேடியுங் கண்டிலாமல் பிறகு தவஞ்செய்யப் பகவான் அவர்முன் தோன்றி 'மீண்டுந் தவம்புரிந்து உலகங்களைப் படைத்தி' என்றருளிப் போயினர். அவ்வாறே நான்முகர் மீட்டும் தேவவருடத்தில் நூறு வருடங்கள் தவமுஞற்றி உலகம் படைத்தற்கான ஞானம்பெற்று உலகங்களை யளித்தனர் என்பது. இதனை ஆரியப்பப்புலவர் பாகவதம், மூன்றும் ஸ்கந்தத்தின் மூன்று மத்தியாயத்தினுலறிக. (க)

வணங்குஞ் சிலைநுத லுங்கழைத் தோளும் வனமுலைமேற்
சுணங்கும் புதிய நிலவெழு மேனியுந் தோட்டுடனே

பிணங்கும் கருந்தடங் கண்களு நோக்கிப் பிரமனன்பா
லுணங்கும் திருமுன்றி லாய்மறை நான்கு முரைப்பவளே.

(இ-ள்.) மறை நான்கும்-நான்கு வேதங்களையும், உரைப்பவளே-(உன்னை யடைந்தார்க்கு ஐயந்திரிபற) உணர்த்துகின்றவளே (நீ), வணங்கு சிலை-வளைந்த வில்லையொத்த, நுதலும் - நெற்றியையும், கழைத்தோளும் - மூங்கிலைப்போன்ற தோள்களையும், வனமுலைமேல் - அழகாகிய முலைகளின்மீதுள்ள, சுணங்கும் - பசலையையும், புதிய நிலவெழும் - (வளர்பிறைச் சந்திரனையொப்ப) புதிய ஒளிவளரும், மேனியும் - திருமேனியையும், தோட்டுடனே - காதணியோடு, பிணங்கும் - போராடும், தடம் - விசாலமாகிய, கருங்கண்களும் - கரியகண்களையும், பிரமன் - பிரம்மதேவர், அன்பால் நோக்கி - காதலோடுபார்த்து, உணங்கும் - (உன் னூடற்காலத்தில் உன் கூடலைப் பெறுமையின்) வாடுகிற்கும், திரு முன்றிலாய் - மேன்மையாகிய முற்றத்தினையுடையாய், எ - று.

நீ முன்றிலாய் என வினைமுடிக்க. நீ என்பது தோன்று எழுவாய். முன்றிலாய் என்பது குறிப்பு வினைமுற்றுப் பயனிலை. முன்றில்-பகுதி, இது இலக்கணைப்போலி, இலக்கண முடையதாங்கால் இல்முன் என நிற்குமென்க. ஆய் - முன்னிலையொருமை வினைமுற்று விகுதி. வணங்கும் - வணங்கிய, இறந்தகாலத்தில் எதிர்கால மயங்கியது. அன்பால் என்பதில் ஆல் மூன்றனுருபு; இது அவ்வேற்றுமையின் உருபுகளிற் சேர்ந்தனவாம் ஒடு, ஒடு உருபுகளின் பொருளாகிய உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. பிரமன் - விருத்தியடைந்தவன்.

வளர்பிறைச் சந்திரனை யொப்பப் புதிய ஒளி நாளும் வளருந் திருமேனி யென்பான் 'புதய நிலவெழும்' என்றார். வளர்பிறைச் சந்திரனை யொப்ப என்பது எதனாற் பெற்ற பொருளெனின் "புதிய நிலவு" என்றதனாற் பெற்ற பொருளென்க.

உணங்கும் என்பதற்கு விடும் என்பதே பொருளாமேனும், முன்றிலாய் என்றதனால் வாடிநிற்கும் எனப் பொருளுரைக்கப்பட்டதென்க. அவர் வாடுதற்குக் காரணம் அத்தேவியின் கூடலைப் பெருமையேயாகலானும், அவர் அங்ஙனம் அத்தேவியின் கூடல்பெருமை அத்தேவிக்கு ஊடல் தோன்றியகாலத்தேயாமாகலானும் உணங்கும்என்றதற்கு உன் கூடலைப்பெருமையின் வாடிநிற்கும் எனப் பொருளுரைக்கப்பட்டது. ஊடற்காலத்தென்னமல், உன் கூடலைப்பெருமல் வாடிநிற்கும் என்று மாத்திர முரைத்தலாகாதோவெனின், அங்ஙன முரைப்பின் அத்தேவி அப்பிரமதேவரிடம் அன்பிலாள் எனவும், அதனால் அவர்களுள் ஒருதலைக்காமமன்றி ஒத்தகாம மின்றுமெனவுங் கொள்ள வேண்டிவருமாதலின் அங்ஙனமுரைத்த லாகாதென்க. (உ)

உரைப்பா ருரைக்குங் கலைகளெல் லாமெண்ணி லுன்னையன்றித்
தரைப்பா லொருவர் தாவல ரோதண் டாளமுலை
வரைப்பா லமுதுதந் திங்கென்னை வாழ்வித்த மாமயிலே
விரைப்பா சடைமலர் வெண்டா மரைப்பதி மெல்லியலே.

(இ-ள்.) தண் தாளம் - குளிர்ச்சியாகிய முத்துமாலையை அணிந்த, முலை-தனங்களாகிய, வரைப்பால் அமுது - மலையிலுள்ள தேனை, தந்து - கொடுத்து, இங்கு - இவ்வுலகில், என்னை - அடியேனை, வாழ்வித்த - இன்புற்று வாழச்செய்த, மா மயிலே-சாயலாற் பெருமையினையுடைய மயிலைப்போன்றவளே, விரை - வாசனையினையுடைய, பாசு அடை - பசுமையாகிய இலையினையுடைய, வெண்டாமரை-வெண்மையாகிய தாமரையினது, மலர் பதி - மலராகிய பதியில் வாழும், மெல் இயலே - மென்மையாகிய குணங்களை யுடையவளே, எண்ணில்-ஆய்ந்து பார்க்கில், உரைப்பார்-(மாணவர்க்கும் அவையத்தார்க்கும் பொருந்தச்) சொல்பவர், உரைக்கும்-மதித்துச் சொல்லும், கலைகள் எல்லாம்-நூற்களெல்லாம், தரைப்பால் - பூமியில், உன்னையன்றி - உன்னையல்லாமல். ஒருவர் - பிறரொருவர், தர வலரோ - கொடுக்க வன்மையுடையராவரோ (ஆகார்), எ-று.

தாளம் - முத்து; அது அதனிட்டத்தாலாகிய மாலையை யுணர்த்தலின் கருவியாகுபெயர்; அன்றி மாலைக்கு முத்துக்களைச் சினைகளெனக்கொண்டு சினையாகுபெயரென்பதுமாம். முலைவரை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. முலையையே வரையாகக் கூறினமையின் இஃது உருவகவணி; என்னை, "உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித், தொன்றென மாட்டினஃ துருவக மாகும்" என்றலின். வரைப்பால் என்பதில் பால் ஏழனுருபு. வரைப்பால் அமுது என்றமையின் அமுது என்பதற்குத் தேனெனப் பொருளுரைக்கப்பட்டது; என்னை வரையிற்பெறும் அமுது அதுவாகலின். மா-பலபொருளொருசொல்; அது ஈண்டுப் பெருமையென்னும் பொருளைத் தந்தது. மயில் என்பது அதனையொத்த சாயலையுடையாளை யுணர்த்தலின் உவமையாகுபெயர். வெண்டாமரை யென்பதில் வெண்மை என்பது பிறிதினியைபு நீக்கிய அடை. வெண்மையாகிய பூக்களைத் தருந் தாமரைக்கொடியை வெண்டாமரையென்ப. இங்ஙனமே செம்மையாகிய பூக்களைத் தருந் தாமரைக்கொடியைச் செந்தாமரை என்றலுங் காண்க; வெண்டாமரை யென்பது முதலின் பெயர். பாசடை யென்பது பசுமை+அடை எனப் பிரிக்கப்படும். பசுமை என்பது "ஈறுபோதல்"என்றதனால் மை கெட்டு, "ஆதிநீடல்" என்றதனால் முதற்பகரநீண்டு பாசு என்றாய், நிலைமொழியாக நின்று, அடை என்னும் வருமொழியோடு கூடுகையில் "உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்" என்றதனால் ஈற்றுகரங் கெட்டு நின்ற மெய்யின்மேல் "உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" என்றதனால் வருமொழிமுத லுயிரேறிப் பாசடை என்றாயிற்று. தரைப்பால் உரைப்பாருரைக்குங் கலைகளெனக் கூட்டிப் பொருளுரைத்தலுமாம். ஓ - எதிர்மறைப்பொருளது. மெல்லியல் என்பது மென்மையாகிய குணங்களை யுடையாள் என்னும் பொருளைத் தருதலின் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப் பெயர்; அன்றி மென்மையையும் (நல்ல) இலக்கணங்களையுட் உடையாள் எனப் பொருள்கொண்டு உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த

அன்மொழித்தொகைப்பெயர் என்றலுமாம். மயிலே, மெல்லியலே என்பன விளிப்பெயர்கள். அமுது என்பது தற்பவ வடமொழியாகிய அமிருதம் என்பதன் மரூஉ. இது அமுதம், அமிழ்து, அமிழ்தம் எனவும் வழங்குதல் காண்க. இது வடமொழியில் அம்ருதம் என விருக்கும். ம்ருதம் - சாவு; அம்ருதம் சாவின்மை; அது சாவின்மையைச் செய்வதாகிய தேவருணவை யுணர்த்தலின் காரியவாகுபெயர்; அஃது அதனையொப்ப ஒருபுடையின்பம் பயக்குந் தேனை யுணர்த்தலின் உவமையாகுபெயர். (ரு)

இயலா னதுகொண்டு நின்றிரு நாமங்க ளேத்துதற்கு
முயலாமை யாற்றடு மாறுகின் றேனிந்த மூவுலகுஞ்
செயலா லமைத்த கலைமக ளேநின் றிருவருளுக்
கயலா விடாம லடியே னையுமுவந் தாண்டருளே.

(இ-ள்.) இந்த மூவுலகும் - இந்த மூன்றுலகத்துள்ள உயிர்களையும், செயலால் - அவ்வவற்றின் செய்கைக்கேற்றபடி, அமைத்த - சுக துக்கங்களை அடையும்படி படைத்த, கலைமகளே-சரஸ்வதியே, இயல்-இலக்கணத் தேர்ச்சியினால், ஆனது கொண்டு - உண்டானதாகிய அறிவை (நல்லாசிரியரிடம்) பெற்று, நின் திரு நாமங்கள் - உன்னுடைய அழகிய நாமங்களை, ஏத்துதற்கு - துதிக்க, முயலாமையால் - (முன்னைப் பிறவியில்) முயற்சி செய்திராத குறைவினால், தடுமாறுகின்றேன் - இப்பிறவியில் நின்னை வழிபடுதற்குரிய வழிதெரியாமல் திகைக்கின்றேன்; அடியேனையும்-(உனக்கு அடியவர்களாக விரும்பாதவர்களைச் செய்தல்போல) உனக்கு அடியவனாயிருக்கு மென்னையும், நின் திரு அருளுக்கு - உனது மேன்மையாகிய கருணைக்கு, அயலா விடாமல்-அன்னியனாகச் செய்துவிடாமல், உவந்து-விரும்பி, ஆண்டு-(என் அடிமைத்தன்மையை யேற்று) ஆளுதல்கொண்டு, அருள் - அருள்புரிவாயாக, எ - று.

நின் றிருவருளுக் கயலாவிடாம லடியே னையுமுவந் தாண்டருள் என்பதற்கு அடியேனையு முவந்து நின்றிருவருளுக் கயலாவிடாமல் ஆண்டருள் என முன்போலவே இயைத்துப் பொருளுரைத்து; (உணர்ந்து உன்னை வழிபடும் அறிவின் மிக்க அன்பர்களை ஆளுதல்போல) அத்தகைய அறிவில்லாதவனேனும் உன் அடியவனாயிருக்கும் என்னையும் விரும்பி உன் மேன்மையாகிய கருணைக் குரியவனாகச் செய்தாண்டருள் என்றுரைத்தலுமாம். அடியேனையும் என்பதில் உம்மை முற்கூறிய பொருளில் எச்சப்பொருளது; பிற்கூறிய பொருளில் இழிவுசிறப்போடு கூடிய எச்சப்பொருளது. மூவுலகும் என்பதில் உம்மை முற்றுப்பொருளது. உலகு என்பது இடவாகு பெயராய் உலகிலுள்ள உயிர்களை யுணர்த்தியது. இயலானது என்பது ஏதுப்பொருட்டாகிய மூன்றனுருபு தொக்கதொடர். அதை இயலாலானது என விரிக்க. இயல் - இலக்கணம்; அது எழுத்துச் சொற்பொருளியாப்பணியென வைந்தாம். ஆனது-ஆனதாகிய அறிவு; இது வினையாலணையும் பெயர். ஆனதுகொண்டு என்பது இரண்டன்றொகை, ஆனதைக்கொண்டு என விரிக்க. கொண்டு - வினையெச்சம், மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபன்று. ஏத்துதற்கு என்பது குவ்வீற்று வினையெச்சம்; இதில் ஏத்து - பகுதி, து, அன் என்னு மிரண்டுஞ் சாரியைகள். முதற்சாரியையின் உகரங்கெட்டதும், இரண்டாஞ் சாரியையின் னகரமெய் றகரமெய்யானதுஞ் சந்தி, கு - வினையெச்ச விகுதி. 'ஏத்துதற்கு முயலாமையாற் றடுமாறுகின்றேன்' என முற்பிறப்பில் வழிபாடாற்ற முயலாமையை இப்பிறப்பின் தடுமாற்றத்திற்குக் காரணமாகக் கூறியிருப்பினும், இப்பிறப்பின் தடுமாற்றத்திற்குக் காரணம் வழிபாடாற்றும் வழியுணராமையெனவும், அதற்குக்காரண முற்பிறப்பில் வழிபாடாற்ற முயலாமை எனவுங்கொள்க. என்னை, இப்பிறப்பின் தடுமாற்றத்திற்கு நேர் காரணம் வழிபாடாற்றும் வழியுணராமையேயன்றி மற்றன்றாகலின். முயலாமையால் என்பதில் முயலாமை எதிர்மறைத் தொழிற்பெயர்; அதின் முயல்-பகுதி, ஆ-எதிர்மறை விகுதி,

முயலா - அனைத்துமோர் பகுதி, மை - தொழிற்பெயர் விகுதி; ஆல்- ஏதுப்பொருட்டாகிய மூன்றனுருபு. அயலா என்பதில் ஆ என்பது ஆக என்பதன் ஈறுதொக்கது. அடியேன் என்பது பண்பினடியாகப் பிறந்த தன்மையொருமைக் குறிப்புவினைமுற்றுப்பெயர். அடிமை - பகுதி, மை கெட்டதும் யகரமெய் தோன்றியதுஞ் சந்தி. என் - தன்மை யொருமை வினைமுற்று விகுதி.

சரஸ்வதிதேவியின் நாமங்கள் :

"பாரதி வாணி பனுவ லாட்டி
வெண்டா மரையாள் வெள்ளை மேனியாள்
நான்முகன் கிழத்தி நாமகள் கலைமகள்
உலக மாதா வூர்பூ வாகனி
ஞான மூர்த்தி நற்பா மடந்தை
சாவித் திரியே காயத் திரியென
வாக்கின் செல்வியை நோக்கிய பெயரே."

என்னு மிதனு லறிக. (ச)

அருக்கோ தயத்தினுஞ் சந்த்ரோ தயமொத் தழகெறிக்குந்
திருக்கோல நாயகி செந்தமிழ்ப் பாவை திசைமுகத்தா
லிருக்கோது நாதனுந் தானுமெப் போது மினிதிருக்கு
மருக்கோல நான்மல ராளென்னை யாளு மடமயிலே.

(இ-ள்.) செந்தமிழ் பாவை - செந்தமிழ்க்குரிய தெய்வப்பெண்ணும், திசை முகத்தால் - நான்கு முகத்தினுலும், இருக்கு-வேதங்களை, ஓது நாதனும் - ஓதும் இறைவனுகிய பிரம்மாவும், தானும் - தானும், எப்போதும் இனிது இருக்கும்-எக்காலமும் நன்கு எழுந்தருளியிருக்கும், மரு-வாசனையையுடைய, கோலம்-அழகாகிய, நாள்-அன்றலர்ந்த, மலராள் - தாமரையை யுடையவளும், என்னை ஆளும் - என்னை அடிமைகொண்டருளிய, மடம் - இளமையினையுடைய, மயில் - மயில்

போலுஞ் சாயலையுடையவளுமாகிய சரஸ்வதிதேவி, அருக்கோதயத்திலும் - சூரியனது உதயகாலத்திலும், சந்த்ரோதயம் ஒத்து - சந்திரனது உதயத்தைப்போன்று, அழகு எறிக்கும்-ஒளியைப் பரப்புகின்ற, திரு-மேலான, கோலம்-அழகினையுடைய, நாயகி-தலைவியாவள், எ-று.

பாவையும், மலராளும், மயிலுமாகியதேவி திருக்கோலநாயகி என முடிக்க. என்னையாளு மடமயிலென்பதை என்னையாளு மயில், மடமயில் என இயைக்க.

அர்க்க+உதயம் என்பதும், சந்த்ர+உதயம் என்பது முறையே அர்க்கோதயம், சந்த்ரோதயம் என்றாயின; இவை குணசந்தி. அ, ஆமுன் உ, ஊவரின் இரண்டுங் கெட்டு இடையில் ஓர் ஓகாரந்தோன்று மென்பது வடநூல்விதி. இவற்றுள், அர்க்கன் என்பது "ரவ்வழி யுவ்வுமாம்" என்றதனால் அருக்கன் எனத் திரிந்து வந்தது. அருக்கோதயத்திலும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. அருக்கோதயம், சந்திரோதயம் என்பன ஆறன்றொகைகள். அழகு என்பது அழகினைச் செய்யும் ஒளியை யுணர்த்தலாற் காரியவாகுபெயர். எறிக்கும் என்பது எதிர்காலப் பெயரெச்சம்; அஃது ஈண்டு எறிக்குந் தன்மையை யுணர்த்திற்று; அது கோலம் என்னும் பெயரைக் கொண்டது. திரு என்பது இடைப்பிறவரல்; இதனை "உருபு முற்றீரெச்ச கொள்ளும் பெயர்வினை யிடைப்பிறவரலுமாமேற்பன" என்றதனாலறிக. பாவை-பதுமை, அது அழகினாற் பதுமையைப்போன்ற சரஸ்வதியை யுணர்த்தியது உவமையாகுபெயர். திசா என்னும் வடசொல் "ஆவீறையும்" என்றதனால் திசை எனத் திரிந்தது; இதில் திக் என்பது தாது; இதற்கு விலாசம் என்பது பொருள். இஃது இலக்கணையால் நான்கு என்னும் எண்ணைக் குறித்தது. ருக் என்னும் வடசொல் ஈற்றில் உகரச் சாரியை பெற்று "யரலக்கிகரம்" என்றதனால் முதலில் இகரம்பெற்று, ககர மிரட்டித்து இருக்கு என்றாயிற்று. இதற்குப் பொருள் துதி என்பது. இது நான்கு வேதங்களுக்கும், நான்கு வேதங்களின் முதலதற்கும் பெயராய் வழங்கும்.

சந்திரோதயம்போன் றிருந்தும் சூரியோதயத்தில் மழுங்குத லின்றி ஒளியைப் பரப்புதலால் அத்தேவியின் அழகு எவற்றினுஞ் சிறந்தது என்பார் 'திருக்கோலம்' என்றார். திருக்கோலம் எவற்றினும் மேலான அழகு. இங்ஙனமன்றி அருக்கோ தயத்தினுஞ் சந்த்ரோ தய மொத் தழகெறிக்குந், திருக்கோல நாயகியும், செந்தமிழ்ப்பாவையும், திசைமுகத்தா விருக்கோது நாதனுந் தானுமெப் போது மினிதிருக்கு, மருக்கோல நாண்மல ராளுமாகிய மடமயில் என்னையாளும் என முடித்துப் பொருள்கொள்ளினுமாம். இப்பொருளில் ஆளும் என்பது வினைமுற்று. (ரு)

மயிலே மடப்பிடி யேகொடி யேயிள மான்பிணையே
குயிலே பசுங்கிளி யேயன்ன மேமனக் கூரிருட்கோர்
வெயிலே நிலவெழு மேனிமின் னேயினி வேறுதவம்
பயிலேன் மகிழ்ந்து பணிவே னுனதுபொற் பாதங்களே.

(இ-ள்.) மயிலே-(சாயலால்) மயிலையொத்தவளே, மடப்பிடியே-(நடையழகினால்) இளமையுடைய பெண்யானையை யொத்தவளே, கொடியே-(மென்மைத்தன்மைகொண்டு தளருதலால்) கொடிபோன்றவளே, இளம்பிணை மானே-(பார்வையினால்) இளமையையுடைய பெண்மானை யொத்தவளே, குயிலே - (குரலின் இனிமையினால்) குயிலையொத்தவளே, பசுங்கிளியே - (மழலையாகப் பேசுதலால்) பசுமையாகிய கிளிபோன்றவளே, அன்னமே - (வெண்ணிறத்தினாலும் தாமரையில் வீற்றிருக்குந்தன்மையாலும்) அன்னத்தை யொத்தவளே, கூர் - மிகுதியாகிய, மன இருட்கு - மனத்திலுள்ள இருளுக்கு, ஓர் வெயிலே - ஒப்பற்ற சூரியனையொத்தவளே, நிலவு எழும் - சந்திரகாந்தியைப்போன்ற) ஒளி மிகுந்த, மேனி - திருமேனியையுடைய, மின்னே - மின்னற்கொடிபோன்றவளே, மகிழ்ந்து - விரும்பி, உனது பொற்பாதங்களே - உனது அழகாகிய பாதங்களையே, பணிவேன் - வணங்குவேன், இனி - இனிமேல், வேறு தவம் - வேறொரு தவத்தினை, பயிலேன் - செய்யமாட்டேன், எ - று.

மான் பிணையே என்றது பிணை மானே என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. இஃது அல்வழிப்புணர்ச்சி இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பிடி - பெண்யானை, இதன் ஆண் களிறு. பிணை - பெண்மான், இதன் ஆண் கலை. மயில், பிடி, கொடி, பிணை மான், குயில், கிளி, அன்னம், வெயில், மின் என்பன உவமையாகுபெயர்களாய்ச் சரஸ்வதிதேவியை யுணர்த்தி விளிவேற்றுமையை யேற்றன. தபம் என்னும் வடமொழி தவம் எனத் திரிந்துநின்றது. பயிலல் என்பது ஈண்டுச் செய்தல் என்னும் பொருளது. நிலா என்பது "குறியதன் கீழாக் குறுகலு மதனோ, டுகர மேற்றலும்" என்ற விதியின்படி நிலவு என்றாயிற்று. உனது பாதங்களை மகிழ்ந்து பணிதலே எல்லாப் புண்ணிய பலங்களையுந் தருவதாயிருத்தலின் எனக்கு வேறு தவம் புரிய வேண்டுவதில்லை யென்பார், 'மகிழ்ந்து உனது பொற்பாதங்கள் பணிவேன், இனி வேறு தவம் பயிலேன்' என்றார். (சு)

பாதாம் புயத்திற் பணிவார் தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியுந் தந்தருள் பாரதி வெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம் புயத்தி லிருப்பா ளிருப்பவென் சிந்தையுள்ளே
யேதாம் புவியிற் பெறலரி தாவ தெனக்கினியே.

(இ - ள்.) பாதாம்புயத்தில் - தனது திருவடியாகிய தாமரைகளில், பணிவார் தமக்கு - (அன்புடன்) வணங்குகின்ற அடியவர்களுக்கு, பல கலையும் - பலவாகிய நூற்பொருளுணர்ச்சியையும், வேதாந்த முத்தியும் - வேதாந்தங்களிற் கூறப்படும் வீட்டையும், தந்தருள் - கொடுத்தருளும், பாரதி - பாரதி என்னும் திருநாமமுடையவளும், வெள் இதழ் - வெண்மையாகிய இதழ்களையுடைய, பூ - அழகாகிய, சீதம் - குளிர்ச்சியையுடைய, அம்புயத்தில் - தாமரையில், இருப்பாள் - இருப்பவளுமாகிய சரஸ்வதி, என் சிந்தையுள்ளே - எனது மனதில், இருப்பாள் - (என்றும்) வீற்றிருப்பாள், இருப்ப - அங்ஙனம் வீற்றிருத்தலால், எனக்கு - (அத்தேவியின் அருளைப்பெற்ற அடியவனாகிய)

எனக்கு, புவியில் - பூமியில், பெறல் அரிது ஆவது - அடைதல் அருமையாயிருப்பது, எது ஆம் - எதுவாகும், எ - று.

(வி-ரை.) கல்விப்பொருள் செல்வப்பொருள் என்னும் இரண்டனுள் கல்விப்பொருள் எய்தவே செல்வப்பொருள் தானே எய்தும். அவ்விருபொருளு முளவாகவே அறமும் இன்பமும் எய்தும். ஆகையால், அம்மூன்றையும் எய்துதற்குக் காரணமாகிய பலகலையுந் தந்தருள்பவள் என்றதனால் அதனால் எய்தப்படும் அறம் பொருள் இன்பம் என்னு மூன்றையுந் தந்தருள்பவள் என்று கூறியதாயிற்று. கல்வி இம் மூன்றையும் பயக்கு மென்பதனை "கல்வி, இம்மை பயக்குமால்" என்றதனாலும், 'கல்வி, அறம்பொரு ளின்பமும்' என்றதனாலும் அறிக. பின்னே வேதாந்தம் என வேறெடுத்துக் கூறுதலால் முன்னே பலகலை என்றது வீடுபேற்றுக்குக் காரணமான வேதாந்தமுதலிய நூற்களல்லாத இம்மையி னெய்துதற்குரிய மும்மைப் பொருட்பேற்றுக்குக் காரணமாகிய நூற்களை யென்றுணர்க. பல சமயிகள் வீட்டின் இலக்கணத்தைப் பலபடியாகக் கூறினாரேனும் வேதாந்தத்திற் கூறப்படுவதே பொருந்தியதாமென்பார் 'வேதாந்த முத்தி' என்றனர். இது "பிறிதொடுபடாஅன் றன்மதங்கொளல்" என்னு மதம். வேதாந்த மதம்: துவிதம்,அத்துவிதம்,விசிஷ்டாத்துவிதம் என்னு மூவகையினையுடையது. வேதாந்தம் என்பது வேதத்தினது அந்தம் என்றும். இத் தொடரின் பொருள் வேதத்தினது முடிவைக்கூறுநூல் என்பது. இஃது ஆறன்றொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப் பெயர். அந்நூல் உபநிஷத்து. இங்ஙனமாகிய இத்தொடர் ஒரு சொல்லின் றன்மையதாய் நின்று முத்தி என்னும் வருமொழியோடு கூடி வேதாந்தமுத்தி என்றாயிற்று. இத்தொடர் விரிக்கப்படும்போது வேதாந்தத்திற் கூறப்படு முத்தி என்றாகும்; ஆகையால் இதனை எழனுருபும்பயனு முடன்றொக்க தொகைநிலைத்தொடரென்க. இனி வேதாந்த மென்பது காரணவாகுபெயராய் அதனாலெய்தப்படு ஞானத்தை யுணர்த்திற்றெனக்கொண்டு வேதாந்த முத்தி என்பதற்கு ஞானத்தினா லெய்

தப்படும் வீடு எனப் பொருள் கோடலுமாம். இங்ஙனங் கொள்ளின் இத்தொடர் மூன்றனுருபும்பயனு முடன்றொக்க தொகைநிலைத் தொடராம் என்க.

பாத + அம்புயம், வேத + அந்தம் என்பன முறையே பாதாம் புயம், வேதாந்தம் என்றாயின. இங்ஙனமானது தீர்க்க சந்தியாகிய வடமொழிச்சந்தி. அ, ஆ முன் அ, ஆ வரின் இரண்டுங் கெட்டு இடையில் ஓர் ஆகாரந் தோன்றுமென்பர் வடநூலார். பணிவார் என்பது வினையாலணையும் பெயர். இதில், பணி - பகுதி, வ் - எதிர்கால இடைநிலை, இஃதீண்டு எதிர்காலத்தை யுணர்த்தாமல் தன்மைப்பொருளை யுணர்த்தி நின்றது, ஆர் - விகுதி. தந்தருள் பாரதி என்பது வினைத்தொகை நிலைத்தொடர். தந்தருள் என்பதில் தா - பகுதி, அது த - என்றானது குறுக்கல், த்-சந்தி, அது ந்-ஆனது, மெலித்தல், உ-சாரியை, அதில் உகரங்கெட்டது சந்தி, அருள் - துணைவினை விகுதி, இங்ஙனமாகிய தந்தருள் என்பது அனைத்து மோர் பகுதி. (எ)

இனிநா னுணர்வதெண் ணெண்கலை யாளை யிலகுதொண்டைக்
கனிநாணுஞ் செவ்விதழ் வெண்ணிறத் தாளைக் கமலவயன்
றனிநா யகியை யகிலாண்ட மும்பெற்ற தாயைமணப்
பனிநாண் மலருறை பூவையை யாரணப் பாவையையே.

(இ-ள்.) இனி - இனிமேல், நான் உணர்வது - நான் தியானிப்பது, எண் எண் கலையாளை - அறுபத்துநான்கு கலைகட்குமுரியவளும், இலகு - விளங்குகின்ற, தொண்டைக்கனி நாணும் - கொவ்வைப் பழம் (தான் ஒப்பாக முடியாமையால்) வெட்கப்படுதற்குக் காரணமாகிய, செவ்விதழ்-செம்மையாகிய அதரத்தையும், வெள் நிறத்தாளை-வெண்மையாகிய நிறத்தையு முடையவளும், கமலவயன் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமன்றன், தனி - ஒப்பற்ற, நாயகியை - மனைவியும், அகிலாண்டமும் பெற்ற - எல்லா அண்டங்களையும் ஈன்ற, தாயை-அன்னையும், மணம் - (நல்ல) வாசனையினையும், பனி-குளிர்ச்சி

யையும் உடைய, நாள் மலர்-புதிய தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற, பூவையை - (குதலைச்சொற்களால்) நாகணவாய்ப்பறவை போன்றவளும், ஆரணப்பாவையையே - வேதங்களுக்குரிய தெய்வமுமாகிய சரஸ்வதியையே ஆகும், எ-று.

(வி-ரை.) இனிதானுணர்வது எனவும் பாடமுண்டு. இங்ஙனம் பாடங்கொள்ளின் "எண்ணெண் கலையாளை.........ஆரணப்பாவையை உணர்வது இனிது" என இயைத்துப் பொருள்கொள்க. இப்பொருள் உணர்வது என்பதற்கு அத்தேவியின் கலியாணகுணங்களை யறிதல் எனவும், இனிது என்பதற்கு அங்ஙன முணர்தல் நன்மையைப் பயப்பதாம் எனவும், ஆன் சாரியையெனவும் கொள்க. அன்றி, இனிதான்-நன்மையைத் தருவதான வகையினால், உணர்வது - சிந்திப்பது, எண்ணெண் கலையாளை......ஆரணப் பாவையையே எனப் பொருள் கோடலுமாம். இப்பொருளில் ஆன் துணைக்கருவிப்பொருளதாகிய மூன்றனுருபு. பூவை பாவை என்பன உவமையாகுபெயர்கள். எண்ணெண்கலை என்பது பன்மொழித்தொடராகிய பண்புத்தொகை. எட்டாகிய எட்டாகிய கலை என விரியும். தொண்டைக்கனி - உறுப்புத் தற்கிழமைப்பொருளாகிய ஆறன்றொகை. தொண்டை என்பது ஒரு கொடி. செவ்விதழ் வெண்ணிறத்தாள் என்பன முரண்டொடை. அகிலாண்டம் என்பது தீர்க்கசந்தி. அகில + அண்டம் எனப் பிரியும். (அ)

பாவுந் தொடையும் பதங்களுஞ் சீரும் பலவிதமா
மேவுங் கலைகள் விதிப்பா ளிடம்விதி யின்முதிய
நாவும் பகர்ந்ததொல் வேதங்க ளுன்கு நறுங்கமலப்
பூவுந் திருப்பதம் பூவா லணிபவர் புந்தியுமே.

(இ-ள்.) பாவும் - நான்குவகைப் பாக்களும், தொடையும் - நாற்பத்துமூன்றுவகைத் தொடைகளும், பதங்களும் - இருவகைப் பதங்களும், சீரும் - நான்குவகைச் சீர்களும், பலவிதமா - பலவகையாக, மேவும் - (தம்மிடம் வந்து) பொருந்தப் பெறும், கலைகள் - நூற்களை,

விதிப்பாள் - (தன்னடியார் நாவினின்று) இலக்கண விரோதமின்றிப் பாடுவிப்பவளான சரஸ்வதிதேவியினது, இடம் - இடமாவது, விதியின் முதிய நாவும்-பிரம்மதேவரது பழைய நாவும், பகர்ந்த - (அந்நாவினால் அவர் உலகமாந்தர் உய்யுநெறியுணர்ந் துய்தற்பொருட்டு முனிவர்களுக்குச்) சொல்லியருளிய, தொல் வேதங்கள் நான்கும் - பழைமையாகிய நான்குவேதங்களும், நறுங்கமலப்பூவும் - வாசனையையுடைய வெண்டாமரை மலரும், திரு பதம்-(தனது) அழகாகிய பாதங்களை, பூவால் அணிபவர் - மலர்களால் அலங்கரிப்பவரது, புந்தியுமே-மனமுமேயாகும், எ - று.

பா என்பதற்குப் பாவுதல் என்பது பொருள்; இது முதனிலைத் தொழிற்பெயர்; இது முதனிலைத் தொழிலாகுபெயராய்ப் பலவகைத் தொடைகளுந் தன்கண் பாவப்பெற்று நடக்கும் வெண்பா முதலிய செய்யுட்களை யுணர்த்திற்று. செய்யுட்கள் முதன்மையாய் வருவனவும், இனமாய் வருவனவும் என இருவகையின. பா என்பது அவற்றுள் முதன்மையாய்வருஞ் செய்யுட்களையே யுணர்த்தும்; அதனை "சந்தமடிவின் மலர்ப்பிண்டிக் கண்ணூர் நிழற்கீழ், எந்தமடிக ளிணையடியேத்தி யெழுத்தசைசீர், பந்தமடி தொடைப்பா வினங் கூறுவன்" என்றதனாலும், அதன் உரையாலும் அறிக. முதன்மையான பாக்களாவன: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. இப்பாக்கள் நான்களுள் ஒவ்வொன்றற்கும் இனமுண்டு. அவை:—தாழிசை, துறை, விருத்தமென்பன. முற்கூறியாங்குப் பாவென்பது வெண்பா முதலிய முதன்மையான செய்யுட்களையே யுணர்த்துமேனும் ஈண்டுப் பாவென்றதற்கு "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்னும் விதிபற்றி அவற்றி னினங்களையுங் கொள்க. தொடை என்பதற்குத் தொடுத்தல் என்பது பொருள்; இதில் தொடு - பகுதி, உகரக்கேடு - சந்தி, ஐ-தொழிற்பெயர் விகுதி; இது தொழிலாகுபெயராய் எழுத்து, அசை, சீர், அடி முதலியவற்றுள் ஒன்றோடொன்றைத் தொடுத்தற்குரிய மோனை முதலிய உறுப்புக்களை யுணர்த்திற்று.

அதனை "அடியிரண்டு, தொடுத்தன் முதலாயின தொடையே" என்றதனாலறிக. தொடை நாற்பத்து மூன்றுவன:—

அடிமோனை, அடியியைபு, அடியெதுகை, அடிமுரண், அடியளபெடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை என்னுந் தொடை எட்டும்,

இணைமோனை, பொழிப்புமோனை, ஒரூஉமோனை, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய்மோனை, முற்றுமோனை எனவும்,

இணையியைபு, பொழிப்பியைபு, ஒரூஉவியைபு, கூழையியைபு, மேற்கதுவாயியைபு, கீழ்க்கதுவாயியைபு, முற்றியைபு எனவும்,

இணையெதுகை, பொழிப்பெதுகை, ஒரூஉவெதுகை, கூழையெதுகை, மேற்கதுவாயெதுகை, கீழ்க்கதுவாயெதுகை, முற்றெதுகை எனவும்,

இணைமுரண், பொழிப்புமுரண், ஒரூஉமுரண், கூழைமுரண், மேற்கதுவாய்முரண், கீழ்க்கதுவாய்முரண், முற்றுமுரண் எனவும்,

இணையளபெடை, பொழிப்பளபெடை, ஒரூஉவளபெடை, கூழையளபெடை, மேற்கதுவாயளபெடை, கீழ்க்கதுவாயளபெடை, முற்றளபெடை எனவும் வரும் தொடைவிகற்ப முப்பத்தைந்துமாம்.

சீர் என்பதற்கு ஒழுங்கு என்பது பொருள்; அது பண்பாகுபெயராய் அசைகள் ஒன்றோடொன்றியைந்து ஒழுங்காக நிற்றலாலாகும் உறுப்பை யுணர்த்திற்று. அதனை "அசையியைந்து சீர்கொள நிற்றலிற் சீர்" என்றதனாலறிக. சீர்கள் நான்காவன:—ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என்பன. செய்யுளின் முக்கிய உறுப்புகளாகிய தொடையுஞ் சீருங் கூறவே அவற்றின் அங்கமாய்வரு மற்

றைய எழுத்து, அசை, தளை, அடி என்னும் உறுப்புக்களையுங் கூறினு ராயிற்று.

சரஸ்வதியின் அருள்பெற்றோர் இயற்று நூற்களெல்லாம் இலக்கணவிதிக்கு மாறுகொள்ளாமல் இருக்கும் என்பது தோன்ற 'விதிப்பாள்' என்றார். அதனை இந்நூலியற்றினர் திறத்திலேயே காணுதலாகும். வான்மீகர் நாவிலும் சரஸ்வதியேயிருந்து ராமாயணத்தைப் பாடுவித்தனள் என வடமொழியாளர் கூறுதலும் அதனை வலியுறுத்தும். என்னை அவர் மொழியும் இலக்கணநெறிக்கு மாறுகொள்ளாமல் இருத்தலின். பிரம்மதேவரது நா உலகிற்றோன்றிய எல்லா முனிவர் புலவர்களுக்கு முற்பட்ட நாவாகையால் அதனை 'முதிய நா' என்றார். பகர்ந்தனர் எனின், எதன்பொருட்டுப் பகர்ந்தனர், யாவர்க்குப் பகர்ந்தனர் என்னும் வினு நிகழுமாகலின் பகர்ந்த என்பதற்கு உலகமாந்தருய்யுநெறியுணர்ந் துய்தற்பொருட்டு முனிவர்களுக்குச் சொல்லியருளிய என்று பலசொற்கள் வருவித்துப் பொருளுரைக்கப்பட்டன. அன்றியும் பகர்ந்த என்பதற்கு அந்நாவினுல் சொல்லியருளிய என்னும் பொருள் அதிகாரத்தாற் போந்ததென்க. பிரம்மா பகர்ந்தாரெனின் புறுவனவாகப் பகர்ந்தனரோ, முன்னுள்ளவற்றைப் பகர்ந்தனரோவென்னும் ஐயநீக்குதற்குத் 'தொல் வேதங்கள்' என்றார். நான்கு வேதங்கள் என்னுது வேதங்கள் நான்கு என்றது வேதம் முன்னே யொன்றுயிருந்து பின்னே வியாசமுனிவரால் நான்காக வகுக்கப்பட்டது என்பதை விளக்குதற்கென்க; இது சொற்பொருள் விரித்தல் என்னுமுத்தி. (கூ)

புந்தியிற் கூரிரு ணிக்கும் புதிய மதியமென்கோ
அந்தியிற் றேன்றிய தீபமென் கோநல் லருமறையோர்
சந்தியிற் றேன்றுந் தபனனென் கோமணித் தாமமென்கோ
உந்தியிற் றேன்றும் பிரான்புயந் தோயு மொருத்தியையே.

(இ - ள்.) உந்தியில் - (திருமாலினது) திருநாபிக்கமலத்தில், தோன்றும்-தோன்றிய, பிரான்-தலைவராகிய பிரம்மதேவரது, புயம் -

தோள்களை, தோயும் - தழுவும், ஒருத்தியை - ஒப்பற்றவளாகிய சரஸ்வதியை, புந்தியில் - மனதிலுள்ள, கூர் - மிகுந்த, இருள் - அஞ்ஞானமாகிய இருட்டை, நீக்கும் - போக்கும், புதிய - புதுமையையுடைய; மதியம் என்கோ - சந்திரனென்பேனோ, அந்தியில் - மாலைப்பொழுதில், தோன்றிய-(பிறரால் ஏற்றப்படாமல்) தானே விளங்கிய, தீபம் என்கோ - விளக்கென்பேனோ, நல் - நன்மையைப் பயக்கும், அருமறையோர் - அருமையாகிய வேதங்களையுணர்ந்த அந்தணரது, சந்தியில் - (காலைச்) சந்தியாவந்தனகாலத்தில், தோன்றும் - காணப்படும், தபனன் என்கோ - சூரியன் என்பேனோ, மணி தாமம் என்கோ - முத்துகளாலாகிய மாலையென்பேனோ, (இவற்றுள் எதுவென்பேன்), எ - று.

(வி-ரை.) உந்தி என்பது இடவாகுபெயராய்த் திருமாலின் உந்தியிற்றோன்றிய தாமரையை யுணர்த்திற்று. 'நெடுவெள்ள மும்பர் வளநாடு மூட'வுற்ற பிரளயகாலத்தில் உலகங்களை யெல்லாந் திருநாதர் தம் மகட்டடக்கி அவ்வெள்ளத்தின்மீது பசியதோ ராலிலையையுண்டாக்கி அதிற் பச்சிளங் குழவியாய்ப் பள்ளிகொண்டிருந்து அக்காலம்புலர்ந்தவாறே உலகங்களைமீண்டும் புறத்திட்டுப் படைப்பான் கருதித் தமது உந்தியின்முதலில் தாமரையைத்தோற்றுவித்து அதினின்றுந்தோற்றுவிக்கத் தோன்றினவராகையால் பிரம்மதேவரை 'உந்தியிற்றோன்றும் பிரான்' என்றார். தோன்றும் என்பது இயல்பினால் இறந்தகாலத்தில் எதிர்கால மயங்கிய வழுவமைதி. இதனால் பிரம்மதேவர் திருநாதர் தம் முதற்புத்திர ரென்பது தோன்றுமா றறிக. ஆயின் திருமாலுக்குப் புத்திரராய்த் தோன்றியவர்தம் புயந்தோய்பவ ளென்றதனாற் சரஸ்வதிக்குப்போந்த பெருமையாதோவெனின் உலகில் 'அவள் மன்னன் மைந்தனை மணந்தாள்' என்பதனையே பெருமையாகக் கொள்வாரெனின், உலகங்களுக்கெல்லாம் ஒரு தனிநாயகராகிய கடவுளின் புத்திரரது புயந்தோய்பவள் என்பதனாலாகும் பெருமையை அளவிட்டுரைக்கவு முடியுமோ? புதியமதியம் - புதுமையையுடைய மதியம்;

புதுமையாவது உலகில் யாவராலுஞ் சாதாரணமாகக் காணப்படும் பொருளின் வேறுபட்டு யாவரும் வியத்தற்குக் காரணமான தோற்ற முடைமை. அங்ஙனமாயின் அவ்வேறுபாடும், தோற்றமும் ஈண்டு யாவையோவெனின், வானிற்றோன்று மதியம் புறத்திருளைப் போக்கு வது, இத்தேவியாகிய மதியமோ அகத்திருளைப்போக்குவது. அம்மதி யின் தோற்றமோ வளர்வும், தேய்வுமுடையது; இம்மதியின் தோற் றமோ என்று மொருபடித்தா யிருப்பது. இத்தேவி மன இருட்டைப் போக்குதலோடு குளிர்ந்துந் தோற்றுகையால் 'கூரிருணீக்கு மதியம்' என்றார் புதிய என்பது குறிப்புப் பெயரெச்சம். மதியம் என்பதில் அம் சாரியை. குளிர்ந்து தோற்றுகையாவது புலவர் தம் மனமகிழ்ச் சிக்குக் காரணமான கலைகளின் வடிவாய்த் தோற்றுகை. தீபம் ஒவ் வொரு மனையினுமிருந்து மனையி னுட்பொருள்களை விளக்குதல்போல இத்தேவி ஒவ்வொருவர் மனத்தினுமிருந்து கலையி னுட்பொருளை விளக்குதலால் 'அந்தியிற் றோன்றுந் தீபமென்கோ' என்றார்.

சந்தியிற் றோன்றுஞ் சூரியன் தன்மூலமாக யாவருங் கடவுளை வழிபட்டுய்தற்குக் காரணமாயிருப்பதுபோல, இத்தேவியும் கலைகளின் வடிவாயிருந்து தன் மூலமாக யாவருங் கடவுளை வழிபட்டுய்தற் குக் காரணமா யிருத்தலின் 'சந்தியிற் றோன்றுந் தபனனென்கோ' என்றார். தபனன் என்பதற்கு எரிப்பவன் என்பது பொருளாதலால் அச்சொல்லின் குறிப்பால் இத்தேவி தன்னை யடைந்தார்தம் பாவங் களை நாசப்படுத்துபவள் என்பதுந் தோன்றுதலறிக.

மணிகள் நூற்களில் வரிசையாக அமைந்து ஒருவர் மார்பில் வாடாமலிருந்து விளங்குவதுபோல இத்தேவியும் அரிய பலபொருள் களின் வடிவாய் நூற்களில் வரிசையினமைந்து புலவர் மனதிலிருந்து அழியாமல் விளங்குதலால் 'மணித் தாமமென்கோ' என்றார். ஒகாரங் கள் ஐயப்பொருளில் வந்தன. (கo)

ஒருத்தியை யொன்றுமி லாவென் மனத்தி னுவந்துதன்னை
யிருத்தியை வெண்கமலத்திருப்பாளையெண் ணெண்கலைதோய்

கருத்திலை யைம்புல னுங்கலங் காமற் கருத்தையெல்லாந்
திருத்திலை யான்மற வேன்றிசை நான்முகன் றேவியையே.

(இ-ள்.) ஒருத்தியை - ஒப்பற்றவளும், வெண்கமலத்து-வெண்மையாகிய தாமரைப்பூவில், இருப்பாளை - வீற்றிருப்பவளும், எண் எண் கலை - அறுபத்துநான்கு வகையாகிய நூல்கள், தோய் - பொருந்தும், கருத்தியை - (புலவர்களுடைய) மனதிலிருப்பவளும், திசை நான்முகன் - நான்கு திக்குகளிலும் அமைந்த நான்கு முகங்களையுடைய பிரம்மதேவனது, தேவியை - நாயகியானவளும், ஒன்றும் இலா - (தன் வடிவினை அமைத்தற்குரிய) முன்செய்தவஞ் சிறிதும் இல்லாத, என் மனத்தின் - எனது நெஞ்சில், உவந்து - (என்னை நல்வழியிற் செலுத்த) விரும்பி, தன்னை இருத்தியை-(யான் தியானிக்கும்படி) தன் வடிவினை அமைத்தவளும், ஐம்புலனும் - ஐந்து பொறிகளும், கலங்காமல் - (தந்நிலையினின்றுந்) தவறாதபடி, கருத்தை எல்லாம் - என்னுடைய எண்ணங்கள் யாவற்றையும், திருத்தியை - (தன்வடிவை என்னெஞ்சி னமைத்தன் மூலமாகத்) திருந்தச் செய்தவளுமாகிய சரஸ்வதியை, யான் மறவேன் - யான் எக்காலத்திலு மறக்கமாட்டேன், எ - று.

(வி-ரை.) சரஸ்வதிக்கு ஒப்பற்றதன்மை எதனால் எனின், மற்றெதனாலு நீங்காத மனத்திருளைநீக்கி அதனை நன்மையுறச் செய்தலாலென்க.

தன் உயர்ந்த செய்கையினால் ஒப்பற்றவளாயும் பரிசுத்தமான தாமரையும் கற்றுணர்ந்த புலவர் மனமுமாகிய உயர்ந்த இடங்களில் இருப்பவளாயும், உலகமுண்டாதற்குக் காரணமாகிய மூவரில் ஒருவரான பிரம்மதேவரது நாயகியாயுமுள்ள அச்தேவி தன்வடிவினை யான் தியானிக்கும்படி என்னெஞ்சின் அமைத்தற்கான பூர்வ புண்ணியஞ் சிறிதுமில்லாத என்னெஞ்சின் தன்வடிவினை அங்ஙன மமைத்தது அவளது நிரேதுககடாட்ச மென்பார் 'ஒன்றுமி லாவென் மனத்தி

றுவந்த தன்னை, யிருத்தியை' என்றார். இப்பிறப்பில் ஒருவன் புண்ணிய நெறியிற் சேறற்கு முற்பிறப்பிற் செய்தபுண்ணியமே காரணமாகும், ஆகையால் ஒன்றுமிலா என்றதற்கு முன்செய்த தவஞ் சிறிதுமில்லாத என்று பொருள் கூறப்பட்டது. அதனைத் "தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை, யஃதிலார் மேற்கொள் வது" என்றதனாலறிக.

புலன் ஐந்து; அவை:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இவை ஐம்பொறிகளால் நுகரப்படுவன. இவற்றை வடநூலார் விஷயங்களென்பர். இவற்றைத் தனித்தனிச் சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பர். பொறிகள் ஐந்தாவன:—மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இவற்றை வடநூலார் ஞானேந்திரியங்களென்பர். இவற்றைத் தனித்தனிச் சுரோத்திரம், துவக்கு, சட்சு, இரசனம், கிராணம் என்ப. ஈண்டுப் புலனை நுகரும் பொறியைப் புலன் என்றது காரியவாகுபெயர். புலன் என்பது பால்பகாவஃறிணைப்பெயராகலின் ஐம்பொறிகளையுங் கொள்க. ஐம்பொறிகளின் பிறழ்ச்சிக்குக் காரணம் மனப்பொறியின் செயலாகிய எண்ணங்களேயாகையால் அவ்வெண்ணங்களைத் திருத்தினால் பொறிகளின் பிறழ்ச்சி நீங்குமென்பார் 'ஐம் புல னுங்கலங் காமற் கருத்தையெல்லாந், திருத்தியை' என்றார்.

ஒருத்தி என்பது ஒன்று என்னும் எண்ணினடியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப்பெயர். இதன் ஆண்பாற் படர்க்கைப் பெயர் ஒருத்தன், ஒருவன் என்பன. இருத்தி-இருக்கவைத்தவள். இதில் இரு என்னுந் தன்வினைப் பகுதியும் அதனைப் பிறவினையாக்கவந்த துவ் விகுதியும் அவற்றிற்கிடையில் வந்த த் சந்தியுஞ் சேர்ந்து அனைத்துமோர் பகுதியாகிய இருத்து - பகுதி, உகரக்கேடு-சந்தி, இ - பெண்பால் விகுதி. திருத்தி என்பதற்குத் திருத்தினவள் என்பது பொருள். இதில் திருந்து என்னுந் தன்வினைப்பகுதி பிறவினையாதற்கு மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்துவந்த திருத்து-பகுதி, உகரக்கேடு - சந்தி, இ - பெண்பால் விகுதி; இவை குறிப்புவினையாலணையும் பெயர்

கள். கருத்தி என்பதில் கருத்து என்னுஞ் சினைப்பெயர் பகுதி, உகாரக் கேடு - சந்தி, இ - பெண்பாற்பெயர் விகுதி. (கக)

தேவருந் தெய்வப் பெருமானு நான்மறை செப்புகின்ற
மூவருந் தானவ ராகியுள் ளோரு முனிவாரும்
யாவரு மேனைய வெல்லா வுயிரு மிதழ்வெளுத்த
பூவரு மாதி னருள்கொண்டு ஞானம் புரிகின்றதே.

(இ - ள்.) தேவரும் - தேவர்களும், தெய்வப் பெருமானும் - தேவர்களுக்குத் தலைவனான இந்திரனும், நான்மறை - நான்கு வேதங்களாலும், செப்புகின்ற - சொல்லப்படுகின்ற, மூவரும் - அரி அரன் அயன் என்னும் மூன்று மூர்த்திகளும், தானவராகி உள்ளோரும் - அசுரர்களாயுள்ளவர்களும், முனிவாரும்-முனிஸ்ரேஷ்டர்களும், யாவரும் - மற்றைய மனிதரானவரும், ஏனைய எல்லா உயிரும்-முற்கூறிய உயர்திணைப்பொருள்களினும் வேறான (அஃறிணையிற் சேர்ந்த) எல்லாப்பிராணிகளும், ஞானம் புரிகின்றது - தத்தம் ஞானம் விளங்கப் பெறுகின்றமை, வெளுத்த இதழ் - வெண்ணிறமடைந்த இதழ்களையுடைய, பூவரு - பூவில் வீற்றிருக்கின்ற, மாதின் - சரஸ்வதியின் அருள்கொண்டு - அருளாலேயாகும், எ-று.

(வி-ரை.) தெய்வப் பெருமான் - நான்கன்றொகை. செப்புகின்ற என்பதில் செப்பு - பகுதி; இது திசைச்சொல். தாநவர் - காசியபமுனிவரது மனைவியருள் ஒருத்தியாகிய தநு என்பவளது புத்திரர்; இது தத்திதாந்த நாமம். முனிவரர் - முனி சிரேஷ்டர். ஏனைய - குறிப்புப் பெயரெச்சம், இதில் ஏனை - பகுதி, ய் - சந்தி, அ - பெயரெச்ச விகுதி; ஏனைய என்பது முற்கூறிய உயர்திணையினும் வேறாகிய அஃறிணையை யுணர்த்தியது. வெளுத்த என்பதில் வெளு - பகுதி, இது வெண்மை என்னும் பண்புப்பெயரினின்றும் வந்த தெரிநிலைப்பகுதி. அருள் கொண்டு என்பதில் கொண்டு என்பது கருவிப்பொருளதாகிய மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. புரிவு - செய்கை; இஃதீண்டு ஒளி செய்தலை யுணர்த்தியது. (கக)

புரிகின்ற சிந்தையி னூடே புகுந்து புகுந்திருளை
யரிகின்ற தாய்கின்ற வெல்லா வறிவி னரும்பொருளைத்
தெரிகின்ற வின்பங் கனிந்தூறி நெஞ்சந் தெளிந்துமுற்ற
விரிகின்ற தெண்ணெண் கலைமா துணர்த்திய வேதமுமே.

(இ-ள்.) எண் எண் கலைமாது - அறுபத்துநான்கு கலைகளுக்கு முரிய சரஸ்வதி, உணர்த்திய - (உயிர்களுக் குறுதிபயப்ப வேதமுதலிய நூற்களில்) தெரிவித்த, வேதமும் - உண்மைப்பொருள்களின் ஞானமும், புரிகின்ற - (தன்னை) விரும்புகின்ற, சிந்தையினூடு - மனதில், புகுந்து புகுந்து - அத்தேவியைப்போலவே இடைவிடாமற் சென்று, இருளை-(அம் மனத்திலுள்ள) அஞ்ஞானமாகிய இருட்டை, அரிகின்றது - அழியச்செய்கின்றது, ஆய்கின்ற - (எவ்வித வன்மையான நூற்களையும்) ஆராயும் வன்மையைப் படைத்திருக்கின்ற, எல்லா அறிவின் - எல்லா அறிவினாலும், அரும்பொருளை - (கிட்டுதற்கு) அருமையாகிய கடவுளாகிய பொருளை, தெரிகின்ற - உணர்தலால் உண்டாகின்ற, இன்பம் கனிந்து ஊறி - ஆநந்தமானது மிகுந்து ஊற, நெஞ்சம் தெளிந்து முற்ற - (அதனால்) அம்மனம் தெளிவுற்று உயரும்படி, விரிகின்றது - (அம்மனதிற்) பாவுகின்றது, எ-று.

(வி-ரை.) புரிவு - விருப்பம். சிந்தையினூடு என்பதில் இன் சாரியை, ஊடு - எழனுருபு. புகுந்து புகுந்து என்பது அடுக்குத்தொடர், இஃது இடைவிடாமைப்பொருட்டு. எல்லா அறிவினும் என்பதன் உம்மை தொக்கு 'எல்லா அறிவின்' என்றாயிற்று. எல்லா அறிவும் என்றார் ஆன்மாக்கள் பலவாகலின் அவ்வான்மாக்கள்தோறுந் தனித்தனியிற்கு ஞானங்களைக் குறித்தற்கு. தெரிகின்ற என்பது காரணப்பொருட்டாகிய நிகழ்காலப்பெயரெச்சம். அரும்பொருளைத் தெரிதலானது இன்பங் கனிந்தூறுதற்குக் காரணமென்க. ஊறி என்பது ஊறவென்னெச்சத்திரிபு. இஃது காரணப்பொருளதாகலின் இறந்தகால முணர்த்திற்றென்க இது நெஞ்சம் தெளிந்து முற்றுதற்குக் காரணமென்க. வேதமும் என்பதில் உம்மை எச்சப்பொருளது. (கரு)

வேதமும் வேதத்தி னந்தமு மந்தத்தின் மெய்ப்பொருளாம்
பேதமும் பேதத்தின் மார்க்கமு மார்க்கப் பிணக்கறுக்கும்
போதமும் போத வுருவாகி யெங்கும் பொதிந்தவிந்து
நாதமு நாதவண் டார்க்கும்வெண் டாமரை நாயகியே.

(இ-ள்.) நாதம் - (இனிய) ஓசையையுடைய, வண்டு ஆர்க்கும் - வண்டுகள் ஒலிக்கின்ற, வெண்டாமரை - வெண்மையாகிய தாமரையில் வீற்றிருக்கின்ற, நாயகியே - தலைவியே, வேதமும் - ஆன்மாக்களின்பொருட்டுக் கடவுளருளிய நான்கு வேதங்களும், வேதத்தின் அந்தமும் - அவ்வேதங்களினுடைய முடிவாகிய பொருளைக்கூறும் உபநிஷத்துக்களும், அந்தத்தின் - அவ்வுபநிஷத்துக்களிற் கூறப்பட்டுள்ள, மெய்ப்பொருள் - உண்மைப்பொருளாகிய கடவுள், ஆம் - (உலகசிருஷ்டியின் பொருட்டு) அடைந்து வருகின்ற, பேதமும் - மூர்த்திபேதங்களும், பேதத்தின் - அம்மூர்த்தி பேதங்களினாலாகிய, மார்க்கமும் - (பல சமயங்களாகிய) வழிகளும், மார்க்கப் பிணக்கு - அவ்வழிகளின் மாறுபாட்டை, அறுக்கும் - அழித்தொழிக்கும், போதமும் - ஞானமும், போதவுருவாகி - ஞானசொரூபமாய், எங்கும் பொதிந்த - எல்லா இடங்களிலும் மறைந்துள்ள, விந்துநாதமும் - விந்துநாதமுமாயிருப்பவள், எ - று.

(வி-ரை.) வேதமுதலிய யாவும் சரஸ்வதியின் அருளாலேயே யுணரநிற்றலின் அத்தேவியே அவற்றின் வடிவாக இருப்பவளென்றார். உம்மைகள் யாவும் எண்ணுப்பொருளன. பிணக்கு என்பது முதனிலைதிரிந்த தொழிற்பெயர்; இது திரியாமல் இருக்கையிற் பிணங்கு என்றிருக்கும். (கச)

நாயக மான மலரக மாவது ஞானவின்பச்
சேயக மான மலரக மாவதுந் தீவினையா
லேயக மாறி விடுமக மாவது மெவ்வுயிர்க்குந்
தாயக மாவதுந் தாதார்சு வேத சரோருகமே.

(இ-ள்.) நாயகம் ஆன-(எல்லாமலர்களுக்குந்) தலைமை வாய்ந்த, மலர்-(சரஸ்வதிதேவியின்) திருவடித்தாமரைகளுக்கு, அகம் ஆவதும்- இருப்பிடமா யிருப்பதும், ஞான இன்பச் சேய் - ஞானத்தினுலாகிய இன்பத்தின் மிகுதியினையுடைய, அகம் ஆன-அடியவர்களுடைய மன மாகிய, மலர் அகம் ஆவதும் - மலரில் பொருந்தியிருப்பதும், தீவினை யால் எய் அகம் - முன்செய்த தீயவினையால் ஆகும் பாவ எண்ணங் கள், மாறிவிடும் - (பின் செய்த புண்ணியத்தினுல்) நீங்கிவிடுகின்ற, அகம் ஆவதும் - மனதில் (வந்து) பொருந்துவதும், எவ்வுயிர்க்கும் - எல்லாவுயிர்களுக்கும், தாய் அகம் ஆவதும் - தாய்வீடாயிருப்பதும், தாது ஆர் - மகரந்தங்கள் பொருந்திய, சுவேதம் - வெண்மையாகிய, சரோருகமே - தாமரையேயாகும், எ - று.

(வி-ரை.) நாயகமான மலர் என்பதில் மலர் என்பது ஈண்டு உவ மையாகுபெயராய்ச் சரஸ்வதி தேவியின் திருவடியை யுணர்த்தியது. சேய் - நெடுமை; அஃது ஈண்டு மிகுதி என்னும் பொருளைத் தந்தது. இரண்டாவது மலரகம் என்பதில் அகம் என்பது எழனுருபு. தீவினை யால் எய் அகம் என்பதில் அகம் என்பது இடவாகுபெயராய் எண்ணத் தை யுணர்த்திற்று. தீவினையால் எய் அகமாறி விடுமகம் என்றது பாவ எண்ணங்கள் நீங்கிப் பரிசுத்த மடைந்துள்ள மனம் என்றபடி. எல்லா வுயிர்களுக்குந் தாயாகிய சரஸ்வதிதேவியின் உறைவிடமாயிருத்தலின் வெண்டாமரையை "எவ்வுயிர்க்குந் தாயகம்" என்றூர். (கடு)

சரோருக மேதிருக் கோயிலுங் கைகளுந் தாளிணையு
முரோருக முந்திரு வல்குலு நாபியு மோங்கிருள்போற்
சிரோருகஞ் சூழ்ந்த வதனமு நாட்டமுஞ் சேயிதழு
மொரோருக மீரரை மாத்திரை யான வுரைமகட்கே.

(இ-ள்.) ஒரோர் உகம் - (மனிதர்களுடைய) ஒவ்வொரு யுகமும், ஈரரை மாத்திரையான - ஒரேமாத்திரைக் காலமாகத் தோன்றப்பெ றும், உரைமகட்கு - சரஸ்வதிதேவிக்கு, திரு கோயிலும் - அழகிய

கோவிலும், கைகளும்—, தாள் இணையும் - இரண்டு திருவடிகளும், உரோருகமும் - தனங்களும், திரு அல்குலும் - அழகிய அல்குலும், நாபியும் - உந்தியும், ஓங்கு இருள்போல் - மிகுந்த இருள் உலகைச் சூழ்தல்போல, சிரோருகம் சூழ்ந்த - தலைமயிரானது சூழ்ந்துள்ள, வதனமும் - முகமும், நாட்டமும் - கண்களும், சேயிதழும் - செந்நிற மாகிய அதரமும் ஆகிய இவைகள், சரோருகமே - தாமரைமலர்களே யாகும், எ - று.

(வி-ரை.) இமை பதினெட்டுகொண்டது ஒரு காஷ்டை எனவும், காஷ்டை பதினெட்டுகொண்டது ஒரு கலையெனவும், கலை முப்பதுகொண்டது ஒரு முகூர்த்தம் எனவும், முகூர்த்தம் முப்பதுகொண்டது இரவும் பகலும் கூடிய ஒருநாள் எனவும், நாள் முப்பது கொண்டது ஒருமாதம் எனவும், மாதம் பன்னிரண்டு கொண்டது ஒரு வருஷமெனவும், இங்ஙனமாகிய ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒருநாள் எனவும், அவ்வித நாட்கள் முப்பதுகொண்டது தேவர்களுக்கு ஒரு மாதம் எனவும், இம்மாதம் பன்னிரண்டு கொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷம் எனவுங் கூறப்படும். இத்தகைய தேவவருஷம் நாலாயிரத்து எண்ணூறுகொண்டது சந்தியும், சந்தியாம்சமுங்கூடிய கிரேதயுகமாகும். சந்தி என்பது யுகத்தின் உதயகாலம். சந்தியாம்சம் என்பது யுகத்தின் அஸ்தமனகாலம். மற்றவற்றுள், கிரேதாயுகத்தின் ஆயிரத்திருநூறு வருஷங் குறைவானது சந்தியும் சந்தியாம்சமுங் கூடிய திரேதாயுகமாம். திரேதாயுகத்தின் ஆயிரத்திருநூறு வருஷங் குறைவானது சந்தியும் சந்தியாம்சமுங் கூடிய துவாபரயுகமாம். துவாபரயுகத்தின் ஆயிரத்திருநூறு வருஷங் குறைவானது சந்தியும் சந்தியாம்சமுங்கூடிய கலியுகமாம். கிரேதாயுகத்தின் சந்திக்கும், சந்தியாம்சத்திற்கு முரிய வருஷங்கள் தனித்தனி நானூறும், திரேதாயுகத்தின் சந்திக்கும் சந்தியாம்சத்திற்கு முரிய வருஷங்கள் தனித்தனி முந்நூறும், துவாபரயுகத்தின் சந்திக்கும் சந்தியாம்சத்திற்கு முரிய வருஷங்கள் தனித்தனி இருநூறுமாம். ஒவ்வொரு யுகத்தினும் எஞ்சிய

வருஷங்கள் யுகத்துக்குரிய வருஷங்களாம். இவ்வித நான்கு யுகங்களுஞ் சேர்ந்தால் தேவர்களுக்கு ஒரு யுகமாம். இவ்வகை ஆயிரம் யுகங்கள் சேர்ந்தால் பிரம்மாவுக்கு ஒரு பகலாம். இவ்வித ஆயிரவருஷங்கள் கூடினால் பிரம்மாவுக்கு ஓரிரவாம். இங்ஙனங் காலக்கணக்கு மநுதர்மத்தின் முதலத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வகையான காலத்தினையுடைய பிரம்மாவின் நாயகியாய் அவரோடேயிருப்பவளாகையினால் "ஓரோருக மீரரை மாத்திரையான உரைமகள்" என்றார்.

சரோருகம் என்பது சரோருஹம் என்பதன் திரிபு. இது சரஸ்+ருஹம் எனப் பிரிக்கப்படும்; குளத்தில் தோன்றுவது என்பது பொருள்; சரஸ்-குளம்; ருஹம் - தோன்றுதல். உரோருகம் என்பது உரஃ+ருஹம் என்பதன் திரிபு; மார்பில் தோன்றுவது என்பது பொருள். சிரோருகம் என்பது சிரோருஹம் என்பதன் திரிபு; சிரஸ்+ருஹம் எனப் பிரிக்கப்படும். இதன் பொருள் சிரசில் தோன்றுவது என்பது. சேயிதழ் என்பது பண்புத்தொகை; இது செம்மையாகிய இதழ் என விரியும்; செம்மை என்றது 'ஈறுபோதல்'' என்பதனால் மை கெட்டு, 'ஆதிநீடல்' என்பதனால் செ என்பது சேறாய் என்றும், 'முன்னின்ற மெய்திரிதல்' என்பதனால் மகரமெய்யானது யகரமெய்யாகத் திரிந்து சேய் என நின்று இதழ் என்னும் வருமொழியுடன் கூடிச் சேயிதழ் என்றாயிற்று. (கக)

கருந்தா மரைமலர் கட்டா மரைமலர் காமருதா
வருந்தா மரைமலர் செந்தா மரைமல ராலயமாந்
தருந்தா மரைமலர் வெண்டா மரைமலர் தாவிலெழிற்
பெருந்தா மரைமணக் குங்கலைக் கூட்டப் பிணைதனக்கே.

(இ-ள்.) தாவில் - நீங்குதலில்லாத, எழில் - அழகினையுடைய, பெரும் தாமரை மணக்கும் - பெருமையாகிய தாமரைப்பூவின் மணங் கமழும், கலை கூட்டப் பிணை தனக்கு - கலைகளினது தொகுதியினது கட்டாயிருப்பவளாகிய சரஸ்வதிக்குள்ள, கண் தாமரை மலர் - கண்

களாகிய தாமரைமலர்களானவை, கருந்தாமரை மலர் - கருந்தாமரை மலர்களாம்; காமரு - (அடியார்களுடைய) விருப்பம்பொருந்திய, தாள் - திருவடிகளாகிய, அருந்தாமரைமலர்-அருமையாகிய தாமரை மலர்களானவை, செந்தாமரைமலர் - செந்தாமரைமலர்களாம்; தரும் - (அடியார்கள் விரும்பினவற்றை) அளிக்கின்ற, ஆலயமாம் தாமரை மலர் - கோவிலாகிய தாமரைமலரானது, வெண்டாமரைமலர்-வெண்டாமரை மலராம், எ - று.

(வி-ரை.) சரஸ்வதியின் கண்கள் கருந்தாமரையையும், திருவடிகள் செந்தாமரையையும் ஒக்கும் என்பது கருத்து. கருந்தாமரையென்பது கருநெய்தலின் பிறிதொரு பெயர். கருநெய்தலை வடமொழியாளர் நீலாம்புஜமென்பர். காமம் மரு என்பது கடைக்குறைந்து காமரு என்றாயிற்று. மரை, கலை, பிணை என்பன பொருளால் வேறுபட்டுச் சொல்லால் மானின் பரியாயப்பெயர்களாய் நின்றமை ஒருவகைச் சொன்னயமென்க. கலை - ஆண்மான். பிணை - பெண்மான். பெருந்தாமரை - பெருமையாகிய தாமரைப்பூவின் மணம். இதில் தாமரை யென்பது ஈண்டு முதலாகுபெயராய் அதன் பூவை யுணர்த்த அது இடவாகுபெயராய் அதன் மணத்தை யுணர்த்திற் றென்க. தாமரைக்குப் பெருமையாவது "பூவிற்குத் தாமரையே" எனவும், "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" எனவும் புலவர் புகழும்படி பூக்களுக்குள் தலைமை யெய்தி நிற்றல். கலைக்கூட்டம் என்பது ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறன்றொகை; இது பசுமந்தை என்பதுபோலு மென்க. விரியின் கலையினது கூட்டமென்றாம். பிணை - கட்டு; இது முதனிலைத் தொழிற்பெயர். கட்டாவது இன்னநூல் இன்னவகையி னமைந்திருத்தல்வேண்டு மென்னும் வரம்பு. இதனை யாப்பென்பர். இது தொகுத்தியற்றலும், விரித்தியற்றலும், தொகைவிரியாகவியற்றலும், மொழிபெயர்த்தியற்றலுமென நான்குவகைப்படும். இதனைத் "தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப், பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப" என்றதனு

லறிக. பிணே, கட்டு தொழிலாகுபெயராய் வாம்பை யுணர்த்தின வென்க. பிணே தனக்கு என்பதில் தன், அ சாரியைகள். (கஎ)

தனக்கே துணிபொரு ளென்னுந் தொல்வேதஞ் சதுர்முகத்
னெனக்கே சமைந்த வபிடேக மென்னு மிமையவர்தா [தோ
மனக்கேத மாற்று மருந்தென்ப சூடு மலரென்பன்யான்
கனக்கேச பந்திக் கலைமங்கை பாத கமலங்களே.

(இ-ள்.) கனம் - அடர்த்தியாகிய, கேசபந்தி - மயிரின் ஒழுங்கினையுடைய, கலை மங்கை - சாஸ்திரங்களுக்குரிய தெய்வமாகிய சரஸ்வதியின், பாத கமலங்கள் - திருவடிகளாகிய தாமரைகளை, தொல் வேதம் - பழமையாகிய வேதமானது, தனக்கே - தனக்கே உரிமையுடையனவென்று, துணி - நிச்சயித்த, பொருள் என்னும் - பொருள்கள் என்று சொல்லும்; சதுர்முகத்தோன் - நான்கு முகங்களையுடைய பிரம்மதேவர், எனக்கே சமைந்த - என்பொருட்டாகவே அமைக்கப்பட்ட, அபிடேகம் என்னும் - அபிஷேகப்பொருள்கள் என்று சொல்லுவர்; இமையவர் - தேவர்கள், மனக்கேதம் - மனக்குற்றமாகிய நோயை, மாற்றும் - போக்கும், மருந்து என்ப - மருந்தென்று சொல்லுவர்; யான் - (அடியவனாகிய) நான், சூடும் - (சிரசில்) அணியும், மலர் என்பன் - பூ என்பேன், எ - று. (கஅ)

கமலந் தனிலிருப் பாள்விருப் போடங் காங்குவித்துக்
கமலங் கடவுளர் போற்றுமென் பூவைகண் ணிற்கருணைக்
கமலந் தனைக்கொண் டொருகாற்றங் கருத்துள்வைப்பார்
கமலங் கழிக்குங் கலைமங்கை யாரணி காரணியே.

(இ-ள்.) கமலந்தனில் - வெண்டாமரைமலரில், இருப்பாள்-வீற்றிருப்பவளும், கடவுளர் - தேவர்கள், விருப்போடு - அன்புடன், அம் காம் குவித்து-அழகிய கைகளைக் கூப்பி, கமலம் - (தன்) பாததாமரைகளை, போற்றும் - போற்றுகின்ற, மெல் பூவை - (குரலினன்) மென்

மைத்தன்மையை வாய்ந்த குயிலைப்போல்வாளும், கருணைக் கமலம் - கருணையாகிய தேன் பொருந்திய தாமரையாயிருப்பவளும், கலை மங்கை - கலைகளுக்குரிய தெய்வமாதும், ஆரணி - வேதத்திற் சொல்லப்படுகின்றவளும், காரணி - (உயிர்களின் வாழ்க்கைக்குக்)காரணமாயிருப்பவளுமாகிய சரஸ்வதிதேவி, தனை - தன்னை, கொண்டு - (அர்ச்சைவடிவினில்) அமைத்துக்கொண்டு, ஒருகால் கண்ணில் கண்டு - ஒரு முறைக் கண்களால் தரிசித்து, தம் கருத்துள்-தம்மனதில், வைப்பார்-வைப்பவர்களுடைய, கம் மலம் - அறிவின் மயக்கத்தை, கழிக்கும் - போக்கியருளுவள், எ - று.

(வி - ரை.) இரண்டாமடியிற் சரஸ்வதிதேவியின் பாதத்தைக் கமலமெனக் கூறினர். மூன்றாமடியில் அத்தேவியையே கமலமெனக் கூறினர். இங்ஙனம் அத்தேவியையே கமலமாகக் கூறினதற்கேற்பக் கருணை என்றதற்குக் கருணையாகிய தேன் எனப் பொருள் கூறப் பட்டது. இங்ஙனங் கூறப்பட்ட இரண்டும் உருவகமாம். இவற்றுள் இரண்டாவதில் சரஸ்வதிதேவியைக் கமலமாகக் கூறிக் கருணையை அதற்கேற்பத் தேனெனக் கூறாமையின் அஃது ஏகதேசவுருவகமாம். உருவகமாவது உவமப்பொருளையும் உபமேயப்பொருளையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்னு முள்ளுணர்வு தோன்றக் கூறுவது. இதற்குவிதி முற்கூறப்பட்டது.

கமலம் என்ற சொற்கள் நான்கில் முன்னவை மூன்றுஞ் சொற்பொருட் பின்வருநிலையணி; பின்னதொன்றுஞ் சொற்பின்வருநிலையணி. பின்வருநிலையணியாவது ஒரு செய்யுளின் முன்வந்த சொல்லேனும், பொருளேனும், சொல்லும் பொருளுமேனும் பின்னரும் பலவிடத்து வருவது. இதனை,

"முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயின்
பின்வரு மெனிலே பின்வரு நிலையே."

என்றதனாலும் அதன் உரையாலு முணர்க. (கக)

காரணன் பாகமுஞ் சென்னியுஞ் சேர்தரு கன்னியரு
நாரண னாக மகலாத் திருவுமோர் நான்மருப்பு
வாரணன் றேவியு மற்றுள்ள தெய்வ மடந்தையரு
மாரணப் பாவை பணித்தகுற் றேவ லடியவரே.

(இ-ள்.) காரணன் - உலககாரணனாகிய சிவபிரானது, பாகமும் - இடப்பக்கத்திலும், சென்னியும் - சிரசிலும், சேர்தரு கன்னியரும் - பொருந்தியிருக்கின்ற இளமைத்தன்மையினையுடைய பார்வதி கங்கை என்னும் இருவரும், நாரணன்-நாராயணனது, ஆகம் அகலா - மார்பைவிட்டு நீங்காத, திருவும்-ஸ்ரீ மகாலக்ஷுமியும், ஓர் - ஒப்பற்ற, நான்மருப்பு - நான்கு தந்தங்களையுடைய, வாரணன் - ஐராவதம் என்னும் யானையையுடையவனாகிய இந்திரன்றன், தேவியும் - மனைவியாகிய இந்திராணியும், மற்றுள்ள - இன்னுமுள்ள, தெய்வமடந்தையரும் - தேவமாதர்களும், ஆரணப்பாவை - வேதங்களிற் சொல்லப்படும் சரஸ்வதிதேவி, பணித்த-கட்டளையிட்ட, குற்றேவல் சிறிய தொழில்களைச் செய்யும், அடியவரே-அடியவர்களே யாவார்கள், எ - று.

(வி-ரை.) உலகத்துக்குக் காரணமாகிய முக்குணத்தினையுடைய மூவரில் ஒருவராகையாற் சிவபெருமானை ஈண்டுக் 'காரணன்' என்றார். நாராயணன் என்பது நாரணன் என விகாரப்பட்டு வந்தது. நாராயணன் என்பது நாரம்+அயநம் எனப் பிரியும். நிலைமொழியில் ரகாமிருந்தால் வருமொழியின் நகரம் ணகரமாகத் திரியும் என்னும் வடமொழி விதியின்படி வருமொழி நகரம் ணகரமாகத் திரிந்தது. இவற்றுள் நாரம் என்பதற்கு ஆன்மாக்கள் என்பதும், அயநம் என்பதற்கு இடம் என்பதும் பொருளாம். ஆகையால் நாராயணன் என்பதற்கு ஆன்மாக்களுக்கு இடமாயிருப்பவன், ஆன்மாக்களை யிடமாகவுடையவன் என இரட்டுற மொழிதலாகப் பொருள் கூறுவர். ஆன்மாக்களின் உள்ளும் புறம்பும் இருப்பவன் என்பது இவற்றின் கருத்து. நாரம் என்பதற்கு ஜலம் என்னும் பொருளும் உண்மையின்

ஜலத்தை யிடமாக உடையவன் எனவும் பொருள் கூறுவர். பிரளய காலத்தில் பெருவெள்ள மும்பர்வளநாடளவு நிமிர்ந்து நிற்கையில் அவ் வெள்ளத்தால் அழிந்துபோகாதவண்ணம் உலகங்களையெல்லாந் தன்னு ளடக்கி அவ்வெள்ளத்தோர்பாலகனுய்ப் பள்ளிகொண்டிருப்பவன்என் பதுஅதன்கருத்து. இவற்ருல் உலகங்களுக்கெல்லா முதற்காரணனுகிய கடவுளுக்கு நாராயணன் என்பது காரணம்பற்றிவந்த பெயரென்பது நன்கு விளங்கும். பாவை என்பது உவமையாகுபெயராய்ச் சரஸ்வதி தேவியை யுணர்த்திற்று. குற்றேவல் என்பது குறுமையாகிய எவல் என விரியும். ஏவல் - கட்டளை; இதில் ஏவு - பகுதி, உகரக்கேடு சந்தி, அல் - தொழிற்பெயர் விகுதி; இது தொழிலாகுபெயராய் ஏவுதலாற் செய்யுங் காரியங்களை யுணர்த்திற்றென்க. அன்றி ஏவுதல் காரணமும் ஏவியதைச் செய்தல் காரியமுமாதலாற் காரணவாகுபெய ரென்பது மாம். எங்ஙனமாயினும் ஏவல் என்பதற்கு ஏவியதனுற்செய்யுங் காரிய மென்பதே பொருளாதலின் குற்றேவல் என்பதற்குச் சிறிய வேலை கள் என்று பொருள் கூறப்பட்டது. சரஸ்வதிதேவியின் கட்டளையின் வடிவமாகிய நூற்களின் ஞானத்தைக்கொண்டே இத்தேவிமாரெல் லாம் உலகத்திற்காகத் தாங்கள் தாங்கள் செய்கின்ற காரியங்களைச் செய்கின்ருர்கள் என்பது இச்செய்யுளின் கருத்து. ஏகாரம் தேற்றப் பொருளது. இத்தேவிமாரெல்லாம் அவள் பணித்த குற்றேவல் அடி யார் எனவே அவள்பணித்த பெரிய ஏவலைச் செய்வார் அவர்களுடைய நாயகர்களாயிருப்பவர்கள் என்பது தானே போதரும். இவர் இந்நூலைக் கலைகளைப் பயிலுதலில் அவா மிக்குற்றிருந்த இளம்வயதிற் பாடின ராதலின் கலைமகளை இங்ஙனம் எவரினுஞ் சிறப்பித்துக் கூறினர். ()

அடிவேத நாறுஞ் சிறப்பார்ந்த வேத மனைத்தினுக்கு
முடிவே தவள முளரிமின் னேமுடி யாவிரத்தின
வடிவே மகிழ்ந்து பணிவார் தமது மயலிரவின்
விடிவே யறிந்தென்னை யாள்வார் தலந்தனில் வேறிலையே.

(இ-ள்.) அடி - (மோக்ஷமடைதற்குக்) காரணமாகிய, வேதம் நாறும் - ஞானந் தோன்றுதற்குக் காரணமாகிய, சிறப்பு ஆர்ந்த-மேன்மைபொருந்திய, வேதம் அனைத்தினுக்கும் - எல்லா வேதங்களுக்கும், முடிவே - முடிவாகிய பொருளாயுள்ளவளே! தவளம் - வெண்ணிறத்தினையுடைய, முளரி மின்னே - தாமரையில் வீற்றிருக்கு மின்னற்கொடிபோல்பவளே! முடியா - ஒளி குறையாத, இரத்தின வடிவே - மணியைப்போன்ற (அழகு குறையாத)மேனியையுடையவளே! மகிழ்ந்து - அன்புகொண்டு, பணிவார் தமது - (உன்னை) வணங்குகின்ற அடியவர்களினது, மயல் இரவின்-அஞ்ஞானமாகிய இரவினது, விடிவே-விடியற்காலமே! என்னை அறிந்து - (ஆதாரவற்ற) எனது நிலைமையுணர்ந்து, ஆள்வார்-ஆட்கொள்பவர், தலந்தனில் - உலகத்தில், வேறு இலை - (உன்னையன்றி) வேறொருவருமில்லை, எ - று.

(வி-ரை.) அடி - காரணம். வேதம் - ஞானம். இச்செய்யுளில் வந்த வேதம் என்னுஞ் சொற்களிரண்டனுள் முன்னது ஞானத்தையே யுணர்த்தலின் இயற்பெயர். பின்னது தன்னைக் கற்பார்க்கு ஞானத்தைக்கொடுக்கு மறையை யுணர்த்தலின் காரியவாகுபெயர். பணிவார் என்பது வினையாலணையும் பெயர். என்னை யென்பது ஈண்டு எனது நிலைமை என்னும் பொருளைத் தந்தமையின் பொருளாகு பெயர். (உக)

வேறிலை யென்று னடியாரிற் கூடி விளங்குநின்பேர்
கூறலை யானுங் குறித்துநின் றேனேம் புலக்குறும்பா
மாறலை கள்வர் மயக்காம லின்மலர்த் தாணெறியிற்
சேறலை யீந்தருள் வெண்டா மரைமலர்ச் சேயிழையே.

(இ - ள்.) வெண்டாமரை மலர் - வெண்டாமரைமலரில் வீற்றிருக்கின்ற, சேயிழையே-திருத்தமாகிய ஆபரணத்தையணிந்தவளே! வேறு இலை என்று-எனக்கு ரக்ஷகமாவார் (உன்னையன்றி) வேறொருவருமில்லை என்று துணிந்து, யானும் உன் அடியாரில் கூடி - யானும் உன் தொண்டர்களில் ஒருவனாகச் சேர்ந்து, விளங்கு நின் பேர் - (எங்

கும்) விளங்குகின்ற உனது திருநாமங்களை, கூறலை - சொல்லுதலை, குறித்துநின்றேன் - கருதி (அந்நெறியில்) நிலைகொண்டுவிட்டேன்; குறும்பு ஆம் - தீமைபொருந்திய, ஐம்புலம் - ஐந்து புலன்களாகிய, ஆறு அலை கள்வர் - செல்நெறியிலிருந்து (யாவரையும்) வருத்துகின்ற திருடர்கள், மயக்காமல் - (என்கருத்துக்கு மாறாக) என் அறிவைக் கெடுக்காதபடி, நின் - உனது, மலர் தாள் நெறியில் - மலர்போலுந் திருவடியை யடைதற்குரிய வழியில், சேறலை - செல்லுதற்குக் காரணமாகிய திறத்தினை, ஈந்து அருள் - அடியேனுக்குக் கொடுத்தருள்வாயாக, எ - று.

(வி-ரை.) ஐம்புலக்குறும்பாம் ஆறலை கள்வர் என்பதனைக் குறும்பாம் ஐம்புலக் கள்வர் எனவும் ஆறலைக் கள்வர் எனவும் இயைக்க. ஐம்புலன்களாவன-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இவை பொறிகளைத் தம்வயப்படுத்தி அவற்றின் மூலமாக அறிவைக் கெடுத்துத் தீநெறியில் உய்ப்பனவாகையால் அங்ஙனங் கூறினர். தாள்நெறி என்பது தாளையடையுநெறி என விரிதலின் இரண்டனுருபும் பயனுமுடன்றொக்க தொகைநிலைத்தொடர். சேறல் என்பது செல்லுதற்குக் காரணமாகிய திறத்தினை யுணர்த்தலின் காரியவாகுபெயர். இதிற் செல் - பகுதி, தல் - விகுதி, பகுதியின் முதல் நீண்டதும், லகரமெய் கெட்டதும், விகுதியின் தகரம் றகரமாகத் திரிந்ததுஞ் சந்தி. (உஉ)

சேதிக்க லாந்தர்க்க மார்க்கங்க ளெவ்வெவர் சிந்தனையுஞ்
சோதிக்க லாமுறப் போதிக்க லாஞ்சொன்ன தேதுணிந்து
சாதிக்க லாமிகப் பேதிக்க லாமுத்தி தானெய்தலா
மாதிக்க லாமயில் வல்லிபொற் றாளை யடைந்தவர்க்கே.

(இ-ள்.) மயில் - மயில்போன்ற சாயலையுடையவளாகிய, ஆதி - முதன்மையாகிய, கலாவல்லி - கலைமகளது, பொன் தாளை - அழகிய திருவடிகளை, அடைந்தவர்க்கு-சேர்ந்தவர்களுக்கு, தர்க்க மார்க்கங்கள்- (தம்மை யெதிர்ப்போர்கொண்ட) வாதத்திற்குரிய வழிகளை, சேதிக்

கல் ஆம் - கண்டித்தல் கூடும்; எவ்வெவர் - எந்த எந்தத் திறத்தினை யுடையவரது, சிந்தனையும்-மனங்களையும், சோதிக்கல் ஆம்-ஆராய்ந்து அறிதல் கூடும்; உற-(மாணவர் மனதிற்) பதியும்படி, போதிக்கல் ஆம்-(அவர்கட்குக் கலைகளைக்) கற்பித்தல் கூடும்; சொன்னதே - (தாஞ்) சொல்லியதையே, துணிந்து - நிச்சயித்து, சாதிக்கல் ஆம் - நிலைநாட்டல் கூடும்; மிகப் பேதிக்கல் ஆம் - (எப்படிப்பட்டவர்களுடைய மனதையும் அவர்கள் கொள்கையினின்று மாறித் தங்கொள்கையைப் பற்றும்படி) மிகவு மாற்றிவிடுதல் கூடும்; முத்தி எய்தல் ஆம் - மோக்ஷத்தையும் அடைதல்கூடும், எ-று.

(வி-ரை.) சரஸ்வதியின் திருவடிகளை அடைந்தவர்களுக்கு இவற்றையெல்லாஞ் செய்தல் எளிதாம் என்பது கருத்து. சேதிக்கல், சோதிக்கல், சாதிக்கல், பேதிக்கல் என்பன தொழிற்பெயர்கள். இவற்றுள் சேதி, சோதி, சாதி, பேதி என்பன பகுதிகள்; இவை வடமொழியினின்று வந்த வினைப்பகுதிகள். இத்தொழிற்பெயர்களில் க் - சந்தி, கு - சாரியை, அதில் உகரங்கெட்டதுஞ் சந்தி, அல் - தொழிற்பெயர் விகுதி. மயில், வல்லி என்பன உவமையாகுபெயர்கள். முத்தியுந்தானெய்தலாம் என்பதன் உயர்வுசிறப்போடுங்கூடிய எச்சப்பொருளதாகிய உம்மை செய்யுள் விகாரமாய்த் தொகுக்கப்பெற்று முத்திதானெய்தலாம் என்றாயிற்று. அவ்வும்மையினால் இவற்றையெல்லாஞ் செய்யுந்திறம் வாய்ப்பதேயன்றி எவற்றினு மேலான இன்பமாகிய மோக்ஷத்தை யடைதலுங் கூடும் என்னும் பொருள் தோன்றுதல் அறிக. தான்-அசை. (உ௬)

அடையாள நான்மல ரங்கையி லேடு மணிவடமு
முடையாளை நுண்ணிடை யொன்றுமி லாளை யுபநிடதப்
படையாளை யெவ்வுயி ரும்படைப் பாளைப் பதுமநறுந்
தொடையாளை யல்லது மற்றினி யாரைத் தொழுவதுவே.

(இ - ள்.) நாள் மலர் - அன்று மலர்ந்த தாமரைமலர்போன்ற, அம் கையில் - அழகாகிய கையில், அடையாளம் - (மும்மூர்த்திகளின்

தேவிமார்களில் தன்னை யறிதற்குரிய) குறியாகிய, ஏடும் - புத்தகத்தையும், அணி வடமும்-அழகாகிய படிகமணிகளாலாகிய மாலையையும், உடையாளை - உடையவளை, நுண்ணிடை - நுட்பமாகிய இடையையும், ஒன்றும் இலாளை - (தன்னடியவர் வந்து) பொருந்துகின்ற மோக்ஷத்தையு முடையவளை, உபநிடதப் படையாளை-(தன்னடியவர்களுடைய அஞ்ஞானமாகிய பகையை யழித்தற்குரிய) உபநிஷத்துக்களாகிய ஆயுதங்களையுடையவளை, எவ்வுயிரும் - எல்லாவுயிர்களையும், படைப்பாளை - சிருஷ்டிப்பவளை, நறும் - வாசனையையுடைய, பதுமத்தொடையாளை - தாமரைப் பூமாலையையுடையவளை, அல்லது-அன்றி, இனி-இனிமேல், மற்று யாரை-வேறு எவரை, தொழுவது - வணங்குவது ஆகும், எ - று.

(வி-ரை.) இனி வேறெவரையும் வணங்குவதாகாது என்பது கருத்து. அடையாளம் என்பது தனித்தனி ஏடு என்பதனோடும், மணிவடம் என்பதனோடும் இயைந்து பண்புத்தொகையாதல் காண்க. இங்ஙனமன்றி ஏடும், மணிவடமும், அடையாளமுடையாளை என்றியைத்துப் புத்தகத்தையும் படிகமணிமாலையையும் அறிகுறியாகவுடையவளை என்று பொருள் கூறினுமாம். இந்நூலாசிரியர் ராமாயணத்தில் 'புத்தகம் படிகமாலை' என்றதையும் ஈண்டுக் கவனிக்க. உபநிடதப்படை என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். இது உபநிடதமாகிய படை என விரியும். பதுமநறுந்தொடையாளை என்பதை நறும் பதுமத்தொடையாளை என்றியைக்க.

இச்செய்யுளின் இரண்டாம் அடியிலுள்ள உடையாள், இலாள் என்பன சொல்லால் வேறுபட்டுப் பொருளான் முரண்பட நிற்றலின் பொருண்முரண்டொடை எனப்படும். படையாள், படைப்பாள் என்பன பொருளால் வேறுபட்டுச் சொல்லான் முரண்பட நிற்றலின் சொன்முரண்டொடை எனப்படும். (உச)

தொழுவார் வலம்வரு வார்துதிப் பார்தந் தொழின்மறந்து
விழுவா ரருமறை மெய்தெரி வாரின்ப மெய்புளகித்
தழுவா ரினுங்கண்ணி னீர்மல்கு வாரென்க ணாவதென்னை
வழுவாத செஞ்சொற் கலைமங்கை பாலன்பு வைத்தவரே.

(இ-ள்.) வழுவாத - தவறுதலில்லாத, செம் சொல் - செம்மையாகிய சொற்களாலாகிய, கலைமங்கைபால் - கலைகளுக்குரிய தெய்வமாதாகிய சரஸ்வதியினிடத்து, அன்பு வைத்தவர் - அன்பை வைத்தவர்கள், தொழுவார் - (அத்தேவியைப் பலமுறையும்) வணங்குவார்கள்; வலம் வருவார் - பிரதக்ஷணஞ் செய்வார்கள்; துதிப்பார் - தோத்திரம் பண்ணுவார்கள்; தம் தொழில் மறந்து - தமது செயலை மறந்து. விழுவார் - (பூமியில்) விழுவார்கள்; அருமறை - அறிதற்கரிய வேதங்களின், மெய் தெரிவார் - உண்மைப்பொருளை யுணர்வார்கள்; இன்பம் - ஆநந்தத்தால், மெய் புளகித்து - மெய்யின்மயிர் சிலிர்க்கப்பெற்று, அழுவார் - அழுவார்கள்; இன்னும் - மற்றும், கண்ணின் நீர் மல்குவார் - கண்களில் நீர்மிகப்பெறுவார்; என் கண் - (அங்ஙனம் அத்தேவியினிடம் அன்புவைக்காத) என்னிடம், ஆவது - அவ்வன்புக்கறிகுறியாகத் தோன்றுவதாகிய மெய்ப்பாடு, என் - யாதுளதாம், எ-று.

(வி-ரை.) மெய் - பண்புப்பெயர்; இது பண்பாகு பெயராய் உண்மைப்பொருளை யுணர்த்திற்று. இன்னும் என்பது னகரமெய் தொகுத்தலாய் இனும் என்றாயிற்று. சரஸ்வதியினிடத்து அன்புடையார் இடத்து அவ்வன்புக்குரிய மெய்ப்பாடுகள் தோன்றும்; அஃதில்லாத என்னிடத்து அம்மெய்ப்பாடுகளில் தோன்றக்கூடியது யாதென வருந்துகின்றனர் (உரு)

வைக்கும் பொருளுமில் வாழ்க்கைப் பொருளுமற் றெப்பொரு
பொய்க்கும் பொருளன்றி நீடும் பொருளல்ல பூதலத்தின் [ளும்
மெய்க்கும் பொருளு மழியாப் பொருளும் வீழுப்பொருளு
முய்க்கும் பொருளுங் கலைமா னுணர்த்து முரைப்பொருளே.

(இ-ள்.) வைக்கும் பொருளும் - (பல்காலுழன் றீட்டிச் சேமித்து) வைக்கின்ற பொன்மணி முதலிய செல்வங்களும், இல்வாழ்க்கைப்பொருளும் - இல்லறமாகிய வாழ்க்கைக்குரிய புத்திரச் செல்வமும், மற்று எப்பொருளும் - மற்றும் எவ்வகையான பொருள்களும், பொய்க்கும் பொருள் அன்றி-பொய்யாய்ப்போகும் பொருள்களே யல்லாமல், நீடும் பொருள் அல்ல-நிலைத்திருக்கும் பொருள்களாகா; பூதலத்தில் - இப்பூமியில், மெய்க்கும் பொருளும் - அழியாமல் இருக்குஞ் செல்வமும், அழியாப் பொருளும் - அழியாத பொருளாகிய ஆத்துமாவையும், விழுப்பொருளும் - அதிற்சிறந்த பொருளாகிய பரமாத்துமாவையும், உய்க்கும் பொருளும்-(தான் கருவியாயிருந்து யாவர்க்கும்) உணர்த்தும் பொருளும், கலைமான் - கலைகளுக்குரிய தெய்வமாதாவாகிய சரஸ்வதி, உணர்த்தும் - நூற்களால் உணரச்செய்யும், உரைப்பொருளே - சொற்களின் பொருளாகிய ஞானமேயாம், எ - று.

"கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்ற யவை."

எனத் திருவள்ளுவர் கல்வியின் சிறப்பைக் கூறியதுபோல் இவர் இச்செய்யுளான் ஞானத்தின் சிறப்பைக் கூறினார். இல்வாழ்க்கைக்குரிய செல்வமாவார் புத்திரர்கள் என்பதனைத் "தம்பொருளென்ப தம் மக்கள்" என்றதனாலறிக. பொன்மணிமுதலிய செல்வங்களும், புத்திரச்செல்வமும் நிலையில்லாதன வென்பதனை,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று." எனவும்;

"முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு."

எனவுங் கூறிய தொல்லோ ரருண்மொழியானும் அனுபவத்தானுமுணர்க. அநுபவத்தால் உணர்தற் குரியதனை யுணர்தற்கு தொல்லோருரையை யுரைக்கவேண்டுவ தெற்றுக்கெனின், இங்ஙனமிவை நிலையாதன

வாதல் இக்காலத்து மாத்திரமோ பண்டைக்காலத்து முண்டோ என்றெழும் ஐயம் நீக்குதற்கு என்க. மெய்க்கும் பொருளும், உய்க்கும் பொருளும் என இயைக்க. அழியாப்பொருளும், விழுப்பொருளும் என்பவற்றோடு இரண்டனுருபைப் பெய்துகொள்க. ஏகாரம் பிரிநிலைப்பொருளது. (உசு)

பொருளா லிரண்டும் பெறலாகு மென்ற பொருள்பொருளோ
மருளாத சொற்கலை வான்பொரு ளோபொருள் வந்துவந்தித்
தருளாய் விளங்கு மவர்க்கொளி யாயறி யாதவருக்
கிருளாய் விளங்கு நலங்கிளர் மேனி யிலங்கிழையே.

(இ-ள்.) வந்து - (நின் அருகில்) வந்து, வந்தித்து - வணங்கி, அருளாய் - உன் கருணை தமக்குண்டாக, விளக்குமவர்க்கு - (அதனால் தம்) அறிவு விளக்கமுற்றிருக்கின்றவர்களுக்கு, ஒளியாய் - ஒளிவடிவமாகியும், அறியாதவருக்கு - அறிவில்லாதவருக்கு, இருளாய் - இருள்வடிவமாகியும், விளங்கும்-தோன்றுகின்ற, நலம் கிளர் - அழகு மிக்க, மேனி - திருமேனியில், இலங்கு இழையே - விளங்குகின்ற ஆபரணத்தை யணிந்த சரஸ்வதியே! பொருளால் - பொருளாலே, இரண்டும் - அறமும் இன்பமுமாகிய மற்றிரண்டையும், பெறலாகும் என்ற-பெறுதல் கூடும் என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட, பொருள் வான் பொருளோ - செல்வப்பொருள் சிறந்த பொருளோ? மருளாத-எவருமயங்குதற்கு இடந்தராத, சொல் - சொற்களையுடைய, கலை - நூற்களால் உண்டாகும், பொருள் - கல்விப்பொருள், வான் பொருளோ - சிறந்த பொருளோ, (சொல்வாய்), எ-று.

(வி-ரை.) பொருளா லிரண்டும் பெறலாகும் என்றதை, "அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றி வந்த பொருள்" எனவும்,

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணை தெய்த விருதலையு மெய்தும்
நடுவணை தெய்சாதா னெய்து முலைப்பய்
தடுவது போலுந் துயர்." எனவுங் கூறியவாற்றா னறிக.

மருளாத சொல் - இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என மயங்காமல் இதுதான் பொருள் எனத் துணிந்து கொள்ளும்படி நிற்குஞ் சொல். பொருளா லிரண்டும் பெறலாகு மென்ற பொருள்வான் பொருளோ, மருளாத சொற்கலைப்பொருள் வான்பொருளோ என இயைத்துப் பொருள்கொள்க. அருளாய் என்பதிலுள்ள ஆய் என் னெச்சம் ஆகவென்னெச்சத்திரிபு. பின் 'அறியாதவருக்கு' என்று கூறினமையின் முன் 'விளங்குமவர்க்கு' என்பதற்கு அறிவுவிளக்க முற்றிருக்கின்றவர்களுக்கு என்று பொருள் கூறப்பட்டது. விளங்குமவர் என்பதில் விளங்கு-பகுதி, உ-சாரியை, ம்-எழுத்துப்பேறு, அ-சாரியை, வ் - எதிர்கால இடைநிலை, இஃதீண்டுத் தன்மைப்பொருளுணர்த்திநின்றது, அர்-விகுதி ;இது பகரமெய்யை இடைநிலையாகப் பெறின் விளங்குபவர் எனவரும். (உஎ)

இலங்குந் திருமுக மெய்யிற் புளக மெழுங்கண்கணீர்
மலங்கும் பழுதற்ற வாக்கும் வலிக்கு மனமிகவே
துலங்கு முறுவல் செயக்களி கூருஞ் சுழல்புனல்போற்
கலங்கும் பொழுது தெளியுஞ் சொன்மானைக் கருதினர்க்கே.

(இ - ள்.) தெளியும் - மனந்தெளிதற்குக் காரணமாயிருக்கும், சொல் மானை - நூற்களுக்குரிய தெய்வமாதாகிய சரஸ்வதியை, சுழல் புனல்போல் - (மிக்குப் பெருகிவருதலால்) சுழல்கின்ற நீரைப்போல், கலங்கும்பொழுது - மனஞ் சஞ்சலமடையும்பொழுது, கருதினர்க்கு-தியானித்தவர்க்கு, திரு முகம் - (எல்லாவுறுப்புகளிலும்) மேன்மையாகிய முகம் என்னும் உறுப்பு, இலங்கும் - (நன்றாய்ப்) பிரகாசிக்கும்; மெயயில் - தேகத்தில், புளகம் எழும் - மயிர்க்கூச்சு மிகுதியாக உண்டாகும்; கண்கள் - கண்களில், நீர் மலங்கும் - நீர்ததும்பும்; பழுது அற்ற - குற்றமற்ற, வாக்கும் - பேச்சின் திறமும், வலிக்கும் - உறுதியுறும்; மனம் - மனமானது, மிக - மிகுதியும், துலங்கும் - (தெளி

வுற்று) விளங்கும்; முறுவல் செய - புன்சிரிப்புச் சிரிக்கும்படி, களி கூரும் - சந்தோஷமிகும், எ-று.

(வி-ரை.) திருமுகம் என்பதில் திரு என்பதற்கு ஈண்டு மேன்மை என்பதே பொருள். இதற்கு அழகு என்னும் பொருள் ஈண்டுக் கூறுதலாகாது, என்னெனின்; அழகியமுகந் துலங்கும் எனின், முகத்தின் துலக்கத்திற்குக் காரணம் அதன் அழகெனலாவதன்றிச் சரஸ்வதியின் தியானமெனலாகாது ஆகலினென்பது. தெளிதற்குக் காரணமான சொல்லைத் தெளியுஞ்சொல் எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்; அன்றித் தெளிவிக்குஞ்சொல் என்னும் பிறவினையைத் தன்வினையாகக் கூறினர் என்பதுமாம். மான்-உவமையாகுபெயர்.()

கரியா ரளகமுங் கண்ணுங் கதிர்முலைக் கண்ணுஞ்செய்ய
சரியார் கரமும் பதமு மிதழுந் தவளநறும்
புரியார்ந்த தாமரை யுந்திரு மேனியும் பூண்பனவும்
பிரியாதென் னெஞ்சினு நாவினு நிற்கும் பெருந்திருவே.

(இ-ள்.) பெரும் திருவே - (அடைந்தோர்க்குப்) பெருஞ் செல்வமாக இருக்குஞ் சரஸ்வதியே! கரியார் அளகமும் - கருமைநிறம் பொருந்திய கூந்தலும், கண்ணும் - கண்களும், கதிர் - பிரகாசத்தினையுடைய, முலைக்கண்ணும் - தனங்களின் கண்களும், செய்ய-செம்மையாகிய நிறத்தினையுடைய, சரி ஆர் - வளையல்களையணிந்த, கரமும் - திருக்கைகளும், பதமும்-திருவடிகளும், இதழும் - அதரமும், நறும்-வாசனையினையுடைய, தவளம் - வெண்மையாகிய, புரியார்ந்த - (யாவருடைய) அன்பும் பொருந்திய, தாமரையும் - தாமரைப்பூவும், திருமேனியும் - அழகிய மேனியும், பூண்பனவும் - (உன்னால்) அணியப்படுவனவாகிய ஆபரணங்களும், என் நெஞ்சினும் - எனது மனதிலும், (என்) நாவினும் - எனது நாவிலும், பிரியாது நிற்கும்-நீங்காமல் நிலையாக இருக்கும், எ-று.

(வி-ரை.) கருமை என்பது "ஈறுபோதல்" என்றதனால் மை-கெட்டு, "இடையுகர மிய்யாதல்" என்றதனால் உகரம் இகரமாகத்திரிந்து கரி என நின்றது. கரி என்பதற்கு அடுப்புக்கரி எனப் பொருள்கூறி அதனைக் கூந்தலுக்கு உவமையாகக்கோடல் தகுதியுடையதாகாது. குழந்தைகளுக்குப் பசிவருந்தோறும் தாயின் முலைக்கண்களை வாயாற் பற்றிப் பால்குடிக்க நினைப்பாராகையாலும், தாய் அங்ஙன முலைகொடுப்பின் அதை வாயாற்பற்றி நாவினாற் பல்காலும் அதுக்கிக்கொண்டு பால் குடிக்கும் ஆகையாலும் 'முலைக்கண் என் நெஞ்சினும் நாவினும் பிரியாது நிற்கும்' என்றார், பூணப்படுவன என்னுஞ் செயப்பாட்டு வினைப்பொருளிற் பூண்டன எனச் செய்வினை வந்ததென்க. உம்மையாவும் எண்ணுப்பொருளன. (உக)

பெருந்திரு வுஞ்சய மங்கையு மாகியென் பேதைநெஞ்சில்
இருந்தரு ளுஞ்செஞ்சொல் வஞ்சியைப் போற்றினெல் லாவுயிர்
பொருந்திய ஞானந் தருமின்ப வேதப் பொருளுந்தருந்[க்கும்
திருந்திய செல்வந் தருமழி யாப்பெருஞ் சீர்தருமே.

(இ-ள்.) பெருந்திருவும்-(அஷ்டலக்ஷ்மிகளுக்குள் சிறந்த) ஸ்ரீ மகாலக்ஷ்மியும், சயமங்கையும் - விஜயலக்ஷ்மியும், ஆகி - ஆய், என் பேதை நெஞ்சில்-எனது அறியாமையினையுடைய மனதில், இருந்தருளும்-வீற்றிருக்கும், செம் சொல் வஞ்சியை-செப்பமாகிய சொற்களாலாகிய நூற்களுக்குரிய தெய்வமாதாவாகிய சரஸ்வதியை, போற்றின்-துதித்தால், (அத்தேவி) எல்லா உயிர்க்கும் பொருந்திய - எல்லாப் பிராணிகளுக்கும் தகுதியுடையதாய் அமைந்த, ஞானம் தரும்-ஞானத்தைக் கொடுப்பாள்; இன்பம் (தரும்) - (கற்றோர் மனதிற்கு) இன்பத்தைத் தரும்; வேதப்பொருளும்-வேதத்திற்சொல்லப்படும் உண்மைப்பொருள்களையும், தரும் - விளக்கியருளுவள்; திருந்திய-செம்மையான வழியிலான, செல்வம் தரும் - ஐசுவரியத்தைக் கொடுத்தருளுவாள்; அழியா-

என்றுங்கெடாத, பெரும் சீர் தரும் - எவற்றினுமேலாகிய சிறப்பினை யுடைய வீட்டையுங் கொடுத்தருளுவாள், எ-று.

(வி-ரை.) சொல் என்பதுகாரணவாகுபெயராய் நூற்களை யுணர்த்திற்று. சொல் என்பது பால்பகாவஃறிணைப்பெயர். வஞ்சி என்பது உவமையாகுபெயர். எல்லாவுயிர்க்கும் பொருந்திய ஞானம் என்பதற்கு எவ்வகை ஞானம் ஒருவருக்கிருந்தால் எல்லாப் பிராணிகளுஞ் சந்தோஷிக்குமோ அவ்வகையான ஞானம் என்பது கருத்து. வேதத்தைக் கற்குந்தோறும் அதன் பொருள்கள் கற்பார்க்கு இன்பந் தருவனவாமென்பார் 'இன்ப வேதப்பொருள்' என்றார். இது "நவிறொறு நூனயம்போலும்" என்னுந் திருக்குறளின் கருத்தைக் கொண்டிருத்தல் காண்க. வேதத்தின் இன்பப்பொருள் என இயைக்க. வேதப்பொருள் உருபும்பயனு முடன்றொக்கதொகை. திருந்தியசெல்வமாவது நீதியான வழியில் ஈட்டிய செல்வமாமென்க. அழியா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பெருஞ்சீர் என்பது பண்புத்தொகை. இது பெருமைச்சீர் எனப் பிரிக்கப்படும்; தொடர் விரிக்கையில் பெருமையாகிய சீரினையுடையது என்றும்; எவற்றினு மேன்மையாகிய சிறப்பினையுடையது என்பது இதன் பொருள். பெருமை - மேன்மை, சீர்-சிறப்பு, எவற்றினு மேன்மையாகிய சிறப்பினையுடையது வீடேயாம். அந்தாதிகளின் ஈற்றை முதற்செய்யுளின் முதற்சொல்லாலேயே முடித்தல் பெருவழக்காதலின் சீர் எனத் தொடங்கிச் சீர் என முடித்தார். (௩௦)

சரஸ்வதியந்தாதி மூலமும் உரையும்

முற்றிற்று.



ரிப்பன் புஸ்தகசாலை, 87, தம்புசெட்டி வீதி, சென்னை.

---

| | | |
|---|---|---|
| கைவல்ய நவநீத மூலம் (செய்யுள் முதற்குறிப்பகராதியுடன்) | 0 | 2 |
| வேதாந்தசூடாமணி மூலம் டெ ... ... | 0 | 2 |
| சங்கீத சாஸ்திரத்தின் சரித்திரம் ... ... ... | 0 | 4 |
| ஓங்காரத்தின் மஹத்துவம் ... ... ... ... | 0 | 1 |
| அஷ்டாக்ஷர மஹத்துவம் ... ... ... ... | 0 | 1 |
| ஆரியர் சந்தியாவந்தனம் ... ... ... ... | 0 | 1 |
| உபாயஞர்த்த நிஷ்டை ... ... ... ... | 0 | ½ |
| கலியுக தர்மம் ... ... ... ... ... | 0 | 1½ |
| மஹாதேவமாலை ... ... ... ... ... | 0 | 1 |
| பணவிடுதூது ... ... ... ... ... | 0 | 2 |
| தோசாரத் தாலாட்டு, திருத்தாலாட்டு ... ... ... | 0 | 1 |
| பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் ... ... | 0 | 1½ |
| (ஆண்பெண்) பிள்ளைத் தாலாட்டு ... ... ... | 0 | ½ |
| மனமோஹனராஜன் சரித்திரம் ... ... ... | 0 | 1½ |
| புருஷத்துவேஷ பூதகி சரித்திரம் ... ... ... | 0 | 1½ |
| கடன்பட்ட கந்தன் சரித்திரம் ... ... ... | 0 | 1 |
| அவிவேகபூரண குருகதை ... ... ... ... | 0 | 1½ |
| சாவித்திரி சரித்திரம் ... ... ... ... | 0 | 1 |
| திருக்குறள் மூலம் ... ... ... ... | 0 | 4 |
| நன்னூல் மூலம் ... ... ... ... ... | 0 | 2 |
| விஷப்பிரதி விஷத்திரட்டு முதலியன ... ... ... | 0 | 2 |
| ஏகாந்தசேவை ... ... ... ... ... | 0 | 1 |
| அம்மானியம், ஐயாசாமியம், இராஜேசுவரம் உரையுடன் ... | 0 | 8 |
| குடாரம் (திருவள்ளுவர் குறளைப்பற்றியது) ... ... | 0 | 1 |
| ஸ்ரீ தத்துவபோதம் ... ... ... ... | 0 | 1 |
| அஷ்டோத்தர சதநாமாவளி... ... ... ... | 0 | 1½ |
| ஸ்ரீ பர்த்துருஹரி வைராக்கிய சதகம் உரையுடன் ... ... | 0 | 3 |
| கந்தரநுபூதி நூற்பாடல் மூலமும் உரையும் ... ... | 0 | 6 |
| நால்வர் சரித்திரம் (அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர்) | 0 | 2 |
| கயிலாசநாதர் சதகம் ... ... ... ... | 0 | 2 |
| ஜெயங்கொண்டார் சதகம், திருமுகவிலாசம் ... ... | 0 | 2 |
| குருநாதர் சதகம் ... ... ... ... | 0 | 1 |
| மறைசையந்தாதி மூலமும் உரையும் ... ... ... | 0 | 5 |
| கல்வளையந்தாதி மூலமும் உரையும் ... ... ... | 0 | 5 |